# கல்வெட்டுவழிப் பண்பாட்டியல்

முனைவர்

பெ. அர்த்தநாரீசுவரன்

கொங்குவேள் பதிப்பகம்
33/1, இராமசாமி தெரு,
ஆழ்வார்பேட்டை, சென்னை-600 018.

# கல்வெட்டுவழிப் பண்பாட்டியல்

முனைவர்
பெ. அர்த்தநாரீசுவரன்

கொங்குவேள் பதிப்பகம்
33/1, இராமசாமி தெரு,
ஆழ்வார்பேட்டை, சென்னை-600 018.

முதற்பதிப்பு : டிசம்பர், 1996

உரிமை : ஆசிரியருக்கு

பக்கங்கள் : xvi + 88 = 104

வெளியீடு : திருமதி அம்சவேணி
கொங்குவேள் பதிப்பகம்

விலை ரூ. 25-00

அச்சிட்டோர் :
கவிக்குயில் அச்சகம்,
47, நல்லதம்பி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.
தொலைபேசி : 836107

டாக்டர் சி. இ. இராமச்சந்திரன்
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
பேராசிரியர்—தலைவர் (ஓய்வு)
வரலாற்றுத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
இ-70, அண்ணா காலனி
பெசன்ட் நகர்
சென்னை-600090
தொலைபேசி : 4914128

# வாழ்த்துரை

ஒரு நாட்டின் வரலாற்றிற்கு இன்றியமையாத சான்று களை வழங்குவன இலக்கியங்களும் கல்வெட்டுகளும் என்றால் மிகையாகாது. தொல்பழங்காலந் தொட்டே தமிழகம் சிறந்த நாகரிகம் பெற்ற ஒரு நாடாகத் திகழ்ந் திருக்கின்றது. பழந்தமிழர் தம் காலத்து வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்து வைக்கவில்லை என்றாலும் அவர் களுடைய அரசியல், சமுதாய, வாழ்க்கை நெறிமுறை களைப் பற்றி விளக்குகின்ற இலக்கியங்களும், கல்வெட்டு களும், புதை பொருட்களும் நமக்கு மிகுதியாகக் கிடைத் துள்ளன. அவற்றின் துணையால் பழந்தமிழர் தம் வரலாறு பற்றியும், பண்பாடு, நாகரிகம் பற்றியும் நாம் அறிந்து கொள்ள முடிகின்றது. கல்வெட்டுகள் தமிழரின் பண்பாடு, கொடை, வீரம், அரசாட்சி, நீதி போன்ற வற்றைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன.

காதலையும் வீரத்தையும் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் தமிழர்கள். வீரத்தைப் பெருமையாகக்

கருதிய தமிழ் மக்கள் வீரத்தோடு போரிட்டு இறந்த வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபட்டனர். நடுகற்கள் வழிபாடு குறித்து தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் குறிப்புகள் காணப்படுகின்றன.

தமிழகத்தில் ஊராட்சி முறை சிறப்பாக நடைபெற்றதை உத்தரமேரூர்க் கல்வெட்டுகள் எடுத்துக் காட்டுகின்றன. கிராமங்களையும் ஊர்களையும் நிர்வகிக்கப் பல உறுப்பினர்கள் அடங்கிய குழுக்கள் இருந்ததைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். கல்வெட்டுகளில் பல அரிய செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றில் சில செய்திகளைத் தொகுத்து 'கல்வெட்டுவழிப் பண்பாட்டியல்' என்னும் தலைப்பில் டாக்டர் செ. அர்த்தநாரீசுவரன் நூலாக வெளிக்கொணர்ந்துள்ளார். இந்நூலில் அமைந்துள்ள கட்டுரைகள் ஒவ்வொன்றும் நம் சிந்தனையைத் தூண்டக் கூடியவை.

'கட்டி முதலிகள்' என்னும் கட்டுரையில் சங்க இலக்கியங்களிலும், சிலப்பதிகாரத்திலும் 'கட்டி' என்ற மரபினர் குறிக்கப்பட்டுள்ளதை எடுத்துக்காட்டி, கல்வெட்டுகளின் துணைகொண்டு அவர்கள் வழிமரபினை வரையறுக்க முயன்றுள்ளார். தாரமங்கலம், திருச்செங்கோடு போன்ற ஊர்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் கொண்டு இக்கட்டுரை ஆராயப்பட்டுள்ளது. கட்டி முதலிகள் யாருடைய வழித்தோன்றல்கள் என்பது பற்றிய ஆராய்ச்சியாளர்கள் கருத்துகளையும் சுட்டிக்காட்டியிருப்பது போற்றத்தக்கது.

கோயில்களே அரசின் கருவூலங்களாக விளங்கின. கோயில்களின் வருமானம் அன்றாடம் நடைபெறும் பூசைச் செலவுக்கே போதுமானதாக இல்லாத நிலையில் அக் கோயில்கள் அரசுக்குச் செலுத்தி வரும் 'ஒட்டச்சு'

என்னும் வரியை நீக்கி ஆணையிட்டு ஓலை அனுப்பிய செய்தியைக் 'கொங்குக் கோயில்களுக்கு வரி நீக்கம்' என்னும் கட்டுரையில் அறியும்போது நமக்கு வியப்பு உண்டாகிறது.

'நெருக்கடிக் கால நிவாரணச் சேமிப்பு' என்னும் மற்றொரு கட்டுரை நெடிக்கடிக் கால நிலைமையைச் சமாளிக்க அரசன் மேற்கொண்ட நடவடிக்கையைக் கல்வெட்டு கொண்டு ஆராய்கின்றது. அரசர்கள் கொண்டிருந்த விழிப்புணர்வை இதனால் உணரமுடிகின்றது.

'கல்வெட்டில் சமுதாயச் சட்டம்' என்னும் கட்டுரை பல அரிய செய்திகளைக் கூறுகின்றது. பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட்டாலும் அது அவர்களுடைய கணவன்மார்களின் நன்னடத்தையின் அடிப்படையிலேயே இருந்தது என்பதை அறியும்பொழுது அக்காலப் பெண்களின் நிலையை அறிந்துகொள்ள முடிகின்றது. கணவன் நல்லவனாக விளங்கினால் தான் பெண்கள் சமுதாயத்தில் சிறப்புடன் விளங்கமுடியும் என்பதை அறிகின்றோம். பிராமணர்களுக்கும், பிற சமுதாயத்தினருக்கும் போடப் பட்ட சட்டங்கள் குறித்தும் இக்கட்டுரையில் கூறப் பட்டுள்ளது.

கொங்கு நாட்டுப் பிரிவுகள், நிர்வாகக் குழு போன்ற செய்திகள் 'பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள்' என்னும் கட்டுரையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள் என்னும் குழு கோயில் நிர்வாகத்தில் பெரும்பங்கு வகித்ததை இக்கட்டுரையால் அறிகின்றோம்.

குற்றங்கள் ஊர்ச்சபையினரால் ஆராயப்பட்டு அவற்றின் தன்மைகளுக்கு ஏற்ப தண்டனைகள் வழங்கப்பட்டதையும் கல்வெட்டுகளால் அறிகின்றோம். தெரியாமல்,

தவறுதலாக நடந்துவிட்ட கொலைக் குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் அக்காலத்தில் வழங்கப்பட வில்லை என்பதைக் கல்வெட்டுகள் கொண்டு 'கல்வெட்டில் நீதி' என்னும் கட்டுரையில் கூறப்பட்டுள்ளது.

கோயில்களில் பல்வேறு வகையான பணியாளர்கள் பணிபுரிந்துள்ளதைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். அவர்களில் கம்மாளர்க்குச் சில சிறப்புரிமைகள் வழங்கப் பட்டிருப்பதைக் 'கல்வெட்டுகளில் சிறப்புரிமை' என்னும் கட்டுரையில் அறியும்பொழுது நமக்கு வியப்புண்டாகிறது

பதினெட்டுத் தலைப்புகளில் சிறு சிறு கட்டுரைகளாக அமைந்துள்ளது இந்நூல். பல அரிய செய்திகளைக் கொண் டுள்ள கல்வெட்டுகளைத் தேர்ந்தெடுத்துக் கட்டுரை களாகக் கொடுத்திருக்கும் டாக்டர் பெ. அர்த்தநாரீசுவரன் முயற்சி போற்றத்தக்கது; பாராட்டற்குரியது. ஆசிரியர் களும், மாணவர்களும் படித்து, தெரிந்துகொள்ளவேண்டிய நூல்; அனைத்து நூலகங்களிலும் இருக்கவேண்டிய நூல். டாக்டர் அர்த்தநாரீசுவரன் பணி மேலும் சிறக்க வாழ்த்து கின்றேன்.

டாக்டர் பொற்கோ
பேராசிரியர் — தலைவர்
தமிழிலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை-600 005

# சிறப்புரை

டாக்டர் அர்த்தநாரீசுவரன் அவர்கள் கல்வெட்டு ஆய்வில் பயிற்சி உள்ளவர். கல்வெட்டு ஆய்வுக்காகச் சிறப்பு பயிற்சி பெற்றவர். கல்வெட்டியல் துறையில் பண்பாடு தொடர்பாக இவருக்குக் கிடைத்த அரிய செய்திகளை அவ்வப்போது மக்களுக்குப் பயன்படும் வகையில் கட்டுரைகளாக எழுதி இதழ்களிலும் மலர்களிலும் வெளியிட்டிருக்கிறார். அத்தகைய கட்டுரைகளைத் தொகுத்து 'கல்வெட்டுவழிப் பண்பாட்டியல்' என்ற தலைப்பில் இப்போது ஆசிரியர் நூல்வடிவம் கொடுத்திருக்கிறார்.

பொதுவாகத் தமிழ் மக்கள் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய பல செய்திகள் இந்த நூலில் அடங்கியிருக்கின்றன. கல்வெட்டில் எப்படிப்பட்ட செய்திகள் இடம் பெறுகின்றன என்பது பற்றியும் கல்வெட்டின் இயல்புகள் பற்றி

யும் தொடக்கத்திலேயே விளக்குகிறார். ஊராட்சி முறை தொடர்பாகவும் சமயங்கள் தொடர்பாகவும் வரிவிதிப்பு, வரிநீக்கம் ஆகியவை தொடர்பாகவும் நெருக்கடி கால நிவாரணம் தொடர்பாகவும் நிலக்குத்தகை தொடர்பாகவும் வரிக்குறைப்பு தொடர்பாகவும் சமுதாயத்தில் சில பிரிவினருக்கு வழங்கப்பட்ட சிறப்புச் சலுகைகள் தொடர்பாகவும் இந்த நூலில் இவர் கூறியுள்ள பல செய்திகள் வாசிப்பாளர்களுக்குப் பொதுவாக அரிய செய்திகளாகவும் புதிய செய்திகளாகவும் இருக்கும். பண்பாட்டியல் நோக்கில் தமிழ் மக்கள் இந்தச் செய்திகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

சில குறிப்பிட்ட சாதியினர்க்கும் சில தொழில்களுக்கும் வழங்கப்பட்ட சிறப்புச் சலுகைகள் தேவையை ஒட்டி வழங்கப்பட்டன வாகத் தெரிகிறது. தண்டனை வழங்கும்போது சாதி அடிப்படையில் வேறுபாடு பாராட்டியிருப் பதற்குக் கல்வெட்டு வழிச் சான்றுகளை இந்நூல் வழங்கியுள்ளது. சில சாதிகளின் தனிப்பட்ட செல்வாக்கும் ஆட்சியாளர்களின் சமயக் கண் ணோட்டமும் இதற்குக் காரணமாக இருக்கலாம்.

விரிவாக ஆராயவேண்டிய இன்றியமையாத செய்திகள் பல இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. ஆசிரியரின் கூர்த்த பார்வையும் தேர்ந்தெடுப்பு முறையும் இந்த நூலின் சிறப்புக்கு மேலும் மெருகேற்றியுள்ளன.

வரலாற்றுத் துறை ஆய்வாளர்கள் இப்படிப் பட்ட ஆய்வுகளை வளர்த்தெடுக்கும் போதுதான்

தமிழ்ப்பண்பாட்டு வரலாறு சரியான முறையில் உணரப்படும்.

தமிழ்ப்பண்பாடு பற்றி ஆய்வு செய்பவர்கள் இந்தச் செய்திகளை எல்லாம் தகுந்த முறையில் பயன்படுத்திக் கொண்டு பண்பாட்டியல் ஆய்வை விரிவுபடுத்த வேண்டும். தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் தமிழக வரலாற்றிலும் சிறந்த முறையில் பயிற்சி பெற்றுள்ள டாக்டர் அர்த்தநாரீசுவரன் அவர்கள் இத்தகைய நூலை உருவாக்குவதற்குப் பெரிதும் உரிமையும் தகுதியும் உடையவர்.

இத்தகைய பணிகளை மேலும் சிறப்பாகவும் விரிவாகவும் செய்யத்தக்க வகையில் தமிழுலகம் அவருக்குத் தகுந்த முறையில் ஊக்கமளிக்க வேண்டும்.

டாக்டர் **மின்னூர் சீனிவாசன்**
தமிழ்ப் பேராசிரியர்
மாநிலக் கல்லூரி
சென்னை-5

# பாராட்டுரை

கல்வெட்டின் துணையால் அறியனாகும் வரலாறு ஆதாரத்துடன் விளங்குவது. வரலாற்றுப் பெட்டகங்கள், சமுதாயப் பண்பாட்டின் விளக்கங்கள் என்றெல்லாம் போற்றப்படும் கல்வெட்டின் சரித ஏடாக இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. வெகுகாலத் தேவை இதனால் நிறைவு செய்யப்படுகின்றது.

கோயில் நிர்வாகம் குறித்த கல்வெட்டு அடிப்படையிலான கட்டுரை நம் நாட்டில் கோயில், அச்சாணியாய்த் திகழ்ந்தமையைக் காட்டும்.

பெண்ணுக்குச் சொத்துரிமை என்பது அண்மையில் சட்டமாகியது. ஆனால், கல்வெட்டுகளின் மூலம் பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட்டு வந்த சமுதாயமரபு தெரியும்படி இந்நூலாசிரியர் வழங்கிய செய்தி அறிஞர்த்து கு விருந்தாகும்.

ஊர்ச்சபையில் குற்றங்கள் ஆராயப்பட்டன என்பதே நீதி பரிபாலனத்தின் வரலாற்றைக்கூறும். அறிந்து செய்த குற்றமே தண்டனைக்குரியதாகக் கருதப்பட்டதென 'கல்வெட்டில் நீதி' அறிவுறுத்துவது மிகப் பயன்படும் செய்தி.

கல்வெட்டுகளில் கோயில் பணியாளர்கட்கும் கோயிலில் நீடு பணிபுரிந்த குடிகளுக்கும் சிறப்புரிமைகள் தரப் பட்ட செய்தியும் இந்நூலில் காணப்படுகிறது. இது போலும் அருஞ்செய்திகள் பல 18 தலைப்புகளில் சிறு சிறு கட்டுரை மணிகளாக மிளிர்ந்து கருத்துச் சுடரொளி நல்குவனவாயுள்ளன.

டாக்டர் பெ. அர்த்தநாரீசுவரன், சிறந்த விரிவுரை யாளராகத் தமிழ்த்துறைப்பணிகள் ஆற்றுபவர். கல்வி கற்பித்தல் குறித்த கோட்பாட்டு ஆய்வு மிக்கவர். மொழி, இலக்கியம் மட்டுமன்றி, பல்வேறு சமுதாயப் பணிகளின் களத்தில் தம் ஆற்றலைச் சாதனையாக்கிய டாக்டர் பெ. அர்த்தநாரீசுவரன் நம் பாராட்டுக்குரிய அறிவாளர். புத்தக வரிசையில் சிறப்பிடம் பெறத்தகும் இந்நூல் —"கல்வெட்டுவழிப் பண்பாட்டியல்" தமிழுலகின் வர வேற்பைப் பெறும் என்பது நம் நம்பிக்கை. கல்மேல் எழுத் தாய்க் கல்விப்பணியின் புகழ் பூத்த பேராசிரியராக டாக்டர் பெ. அர்த்தநாரீசுவரன் வெற்றியுடன் திகழ நாம் வாழ்த்துகின்றோம்.

# முன்னுரை

கல்வெட்டுகள் ஒரு நாட்டின் காலக் கண்ணாடி; வரலாற்றுப் பெட்டகங்கள்; சமுதாயப் பண்பாட்டின் விளக்கங்கள்; மக்கள் பழக்கவழக்கங்களின் பிரதிபலிப்புகள்; அதற்கும் மேலாக நிகழ்ச்சிகளின் கையேடுகள்.

கல்வெட்டுகள் கோயில்களின் சுவர்கள், பாறைகள் போன்ற இடங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. செப்புத் தகடுகளில் பொறிக்கப்பட்டவை செப்பேடுகள் என்றழைக் கப்பட்டன. அரசர்களின் வழிமுறை, ஆட்சியாண்டு, பட்டப் பெயர்கள், கொடைகள், போர் போன்ற செய்திகள் கல்வெட்டுகளில் தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

தமிழ்நாட்டில் காணப்படும் கல்வெட்டுகள் தொன்மை யான தமிழி எழுத்திலும், பிராமி எழுத்திலும், பெரிதும் வடமொழிக்குப் பயன்பட்ட கிரந்த எழுத்திலும் நாகரி எழுத்திலும், இப்பொழுது பயன்படுத்தி வரும் எழுத்து களிலும் அமைந்துள்ளன.

இலக்கியங்கள் போன்று கல்வெட்டுகளும் வரலாற்றுச் சமுதாயப் பண்பாட்டு ஆய்விற்குப் பெரிதும் துணைபுரி கின்றன. அரசர்களின் ஆட்சிச் சிறப்புகள், கோயில் நிருவாகம், வழிபாட்டு முறைகள், ஊராட்சி முறைகள், மக்களுக்கு வழங்கப்பட்ட உரிமைகள் போன்ற செய்திகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அரசுக்கும் மக்க ளுக்கும் இருந்த பிணைப்பினைக் கல்வெட்டுகளால் அறிந்து கொள்ளமுடிகின்றது.

இந்நூல் பதினெட்டுத் தலைப்புகளைக் கொண்டு விளங்குகின்றது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் வெளியீடான கல்வெட்டு, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் சார்பாக வெளிவரும் ஆய்வுக் கோவை மற்றும் முக்குடை, தேனோலை, கொங்கு போன்ற இதழ்களில் அவ்வப் பொழுது வெளிவந்த கட்டுரைகள், வானொலியில் ஆற்றிய உரைகள் ஆகியவற்றின் தொகுப்பே இந்நூல் ஆகும்.

கல்வெட்டுகளின் அமைப்பு, கல்வெட்டுகள் உணர்த்தும் பண்பாட்டுச் செய்திகள் போன்றவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

பல்வேறு கோணங்களில் பல்வேறு வகையான ஆய்வு களை விரிவான முறையில் நிகழ்த்த இடந்தருவது கல்வெட் டியல். பண்பாட்டு வரலாற்று நோக்கில் பயன்படும் என்று கருதி ஒரு சில செய்திகளை மட்டும் இங்கே சிறுசிறு கட்டுரைகளாக வழங்கியுள்ளேன். இந்த நூல் செய்தி களை அறிவிப்பதோடு விரிவான ஆய்வுக்கு ஒரு வகையில் தூண்டுகோலாக அமையும் என நம்புகிறேன்.

என் முனைவர் பட்ட ஆய்விற்கு வழிகாட்டியாக விளங்கிய பேராசிரியர் டாக்டர் சி. இ. இராமச்சந்திரன் அவர்கள் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியமைக்கு என் உளக்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இளம் ஆய்வாளர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டி, பல்வேறு தலைப்புகளில் ஆராய்ச்சி செய்யத் தூண்டு கோலாக விளங்கும் பேராசிரியர் டாக்டர் பொற்கோ அவர்களே இந்நூல் வெளிவருவதற்குத் தலைமைக் கருத்தா ஆவார். இந்நூலுக்குச் சிறப்புரையும் வழங்கி யுள்ள அவர்களுக்கு என் பணிவு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் செம்மையாக அமைய பல கருத்துகள் வழங்கியதோடு பாராட்டுரையும் வழங்கியிருக்கும் பேராசிரியர் டாக்டர் மின்னூர் சீனிவாசன் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் உருவாக்கத்தில் முனைவர் கடலூர் மணி மாறன், புலவர் இ. கோமதிநாயகம் ஆகியோரர் மகிழ்ச்சியோடு ஒத்துழைப்பு வழங்கியிருக்கிறார்கள். அந்தச் சால்பு நெஞ்சங்கட்கு என் உள்ளம் அன்போடு நன்றி தெரிவிக்கிறது'

# பொருளடக்கம்

# கதை சொல்லும் கல்வெட்டுகள்

"நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே"

என்று தமிழ்ப் பிராட்டி ஔவையார் குறிப்பிடுவதால் பழங் காலந்தொட்டே தமிழகத்தில் கல்லில் எழுத்துகளைப் பொறிக்கும் வழக்கம் நிலவி வந்துள்ளது என்பதை அறிகிறோம். கல்லிலே சிற்பங்களை மட்டும் செதுக்கி வைக்கவில்லை நமது முன்னோர்கள். பல அரிய செய்திகளை நிலைத்து நீடித்து நிற்கும்படிக் கல்லிலே வெட்டியுள்ளனர்.

கல்வெட்டுகள் நமது பண்டைத் தமிழரின் பண்பாடு, கொடை, வீரம், அரசாட்சி, நீதி போன்றவற்றை ஒரு காலக் கண்ணாடி போல் எடுத்துக் காட்டுகின்றன. இவை ஒரு நாட்டின் வரலாற்றிற்கு மிகவும் இன்றியமையாத சான்றுகளாகும்.

போரில் வீர மரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் நடும் வழக்கமிருந்ததைத் தொல்காப்பியம்,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தமரபின் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று மரபில் கல்லொடு புணர"

என்று குறிப்பிடுகின்றது.

நடுகற்களில் வீரனுடைய பெயரும் பெருமையும் குறிக்கப்பட்டிருந்தன என்பதை,

"நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"

என்று அகநானூறும்,

"பெயர் பொறித்து இனி நட்டனரே கல்லும்" என்று புறநானூறும்,

"எழுத்துடை நடுகல்" என்று ஐங்குறு நூறும் குறிப்பிடுவதால் அறியலாம்.

செங்கம், தர்மபுரி போன்ற இடங்களில் பல நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இன்று தாழ்த்தப்பட்டோரில் சிலர் வணங்கும் தெய்வங்களான மதுரை வீரன், இருளன், கறுப்பன், நொண்டி முதலியன நடுகல் வகுப்பைச் சேர்ந்தவை எனக் கருதலாம்.

தமிழ் நாட்டில் கோயில் இல்லாத ஊரே இல்லை எனலாம். ஊர் நிர்வாகங்கள் அனைத்தும் கோயில்களிலேயே நடைபெற்றன. அதனால் பல அரிய செய்திகளைத் தருகின்ற கல்வெட்டுகள் பெரும்பாலும் கோயில் சுவர்களிலேயே காணப்படுகின்றன.

கல்வெட்டுகள் பெரும்பாலும் தமிழிலும் சமஸ்கிருதம் என்று வழங்கப்படுகின்ற வடமொழியிலும் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழ் மொழியைத் தமிழ் எழுத்திலும் வடமொழியைக் கிரந்த எழுத்திலும் பொறித்துள்ளனர்.

கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகளைப் பெரும்பாலும் ஐந்து பகுதிகளாகப் பிரித்துவிடலாம்.

1. கல்வெட்டின் தொடக்கம் அதாவது மங்கல வாசகம்.

2. கல்வெட்டு எழுதப்பட்ட காலம்
3. கல்வெட்டுச் செய்தி
4. கையெழுத்துகள்
5. முடிவு அதாவது ஓம்படைக் கிளவி

கல்வெட்டின் தொடக்கத்தில் "ஸ்வஸ்தி ஸ்ரீ"(மங்கலம் உண்டாகட்டும்) என்னும் சொல்தான் பெரும்பாலும் காணப்படுகின்றது. 16ஆம் நூற்றாண்டிலிருந்து 'அருளிச் செயல்', 'ஹரி நன்றாக குருவே துணை', 'ஹரி சுபமஸ்து', "'ஹரி ஸ்ரீ கணபதயே நம", 'சிவமயம்' போன்ற சொற்களும் கல்வெட்டின் தொடக்கமாக அமைந்துள்ளன.

கொடையளித்த மன்னனின் பெயர், ஆட்சியாண்டு முதலியன கல்வெட்டுகளில் தெளிவாகக் குறிப்பிடப் பெற்றிருக்கும். சோழர் கல்வெட்டுகள் அரசனது பெயரையும் ஆட்சி ஆண்டையும் குறிக்கும் முன்னர் மெய்க்கீர்த்தி என்ற பகுதியை முதலாம் இராசராசன் காலத்திலிருந்து கொண்டுள்ளன. மெய்க்கீர்த்திகளிலிருந்து அம்மன்னனின் அருஞ்செயல்கள், போர் வெற்றிகள், அறக்கொடைகள், விருதுப் பெயர்கள் போன்ற பல செய்திகளை அறிந்து கொள்ளமுடிகிறது.

பெரும்பாலான கல்வெட்டுகள் கோயில்களுக்கு நிலம் தானமாக வழங்கியதையோ, நந்தா விளக்கு எரிப்பதற்கு ஆடு, பசு கொடுத்ததையோ தான் குறிக்கின்றன. நிலம் கொடுக்கப்பட்டிருந்தால் அந்நிலத்தின் நான்கு எல்லைகளும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆடு, பசு முதலியன கொடுக்கப்பட்டிருந்தால் அவற்றின் எண்ணிக்கையும், பொன், தானியம் வழங்கப்பட்டிருந்தால் அவற்றின் அளவும் தெளிவாகக் குறிக்கப் பெற்றிருக்கும்.

கல்வெட்டுகளில் கொடை அளித்தவனின் கையெழுத்து, கொடை அளித்தவன் சொல்ல அதை

எழுதிய ஊர்க்கணக்கன் கையெழுத்து முதலியன காணப் படுகின்றன. சில கல்வெட்டுகளில் கல்லில் பொறித்த தச்சனின் கையெழுத்து, சாட்சிகளின் கையெழுத்துகூடக் காணப்படுகின்றன.

கல்வெட்டின் முடிவில் அளிக்கப்பட்ட கொடையை "பன்மாஹேஸ்வரர் ரக்ஷை" என்றோ, "வைஷ்ணவர் ரக்ஷை" என்றோ குறித்துவிட்டு, அக்கொடைக்குத் தீங்கு நினைத்தாலோ அல்லது தீங்கு செய்தாலோ 'கங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்கள்" என்றோ, "இத்தர்மத்துக்கு அஹிதம் நினைத்தார் கங்கையிடைக் குமரியிடை எழுநூற்றுக்காதத் திலுஞ் செய்தார் செய்த பாவத்துப் படுவார்" என்றோ குறிக்கப்பெற்றிருக்கும். கொடையைக் "காப்பவர்கள் அடி என்முடி மேலின்" என்றும், இத்தன்மத்தை ரஷித்தார் அஸ்வமேத யாகஞ்செய்த பலம் எய்துவராகவும்" என்றும் குறிக்கப்பெற்றிருக்கும்.

கல்வெட்டுகளில் நாடுப் பிரிவு மிகத் தெளிவாகக் குறிக்கப் பெற்றிருக்கும். எடுத்துக் காட்டாகத் திருவான்மி யூரை "செயங்கொண்ட சோழ மண்டலத்து புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டுத் திருவான்மியூர்" என்று முதலாம் இராசேந்திரனின் திருவான்மியூர்க் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. கோட்டம் என்பது தற்கால மாவட்டம் போன்றது. நாடு என்பது வட்டம் ஆகும்.

அறக்கொடைகள் நந்தா விளக்கு எரிப்பதற்கு மட்டு மின்றி, பூசை செய்வதற்கு, நாள்தோறும் மலர், மாலை வழங்குவதற்கு, திருப்பதியம் (தேவாரம், பிரபந்தம்) ஓதுவதற்கு, இசைக் கருவிகள் ஒலிப்பதற்கு, நாட்டியம் ஆடுவதற்கு, திருவிழா எடுப்பதற்கு, கோயில் திருப்பணி செய்வதற்கு மற்றும் பிற பணிகளுக்காகவும் வழங்கப் பட்டிருப்பதைக் கல்வெட்டுகளில் காணலாம்.

பல்வேறு வகையான அளவைகளும் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. வேலி, மா, குழி, குறுக்கம், செய், தடி போன்ற நில அளவைகள், பொதி, கலம், மரக்கால், நாழி, குறுணி, உழக்கு போன்ற பெய்தல், முகத்தல் அளவைகள், பலம், கழஞ்சு, வராகனெடை, கழஞ்சு, குன்றி போன்ற பொன் நிறுவை அளவைகள், பாரம், துலாம், வீசை, பலம் போன்ற பண்ட நிறுவை அளவைகள், பாகம், முழம், சாண், விரல் போன்ற நீட்டல் அளவைகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

வட்டிக்கு விடும் பழக்கமும் அந்தக் காலத்தில் வழக்கத்தில் இருந்ததைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. வட்டி 'பொலி' என்று கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளது. அத்தோடு வட்டி விகிதமும் சில கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளது.

கோயில்களில் பணியாற்றுகின்ற பல்வேறு துறையினரின் ஊதிய விவரமும், பல்வேறு மக்கள் செலுத்தும் பலவகையான வரிகளும், வரி விதிப்புக்கு உரியவை எவை எவை என்பதும், குற்றத்திற்குரிய தண்டனை விவரமும், பல்வேறு பணிக்குரியவர்களின் தகுதியும், இன்னும் இவை போன்ற பொருளாதார, சமுதாயக் கட்டுப்பாட்டு ஒழுங்கு முறை விதிகளும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுகளில் வாயலூர்க் கல்வெட்டு முதன்மை பெறுகின்றது. இதில் பல்லவமன்னர்களின் வழிமரபு தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளது. சோழ மன்னர்களின் வழிமரபைக் கன்னியாகுமரியில் கிடைத்த வீரராசேந்திரனின் கல்வெட்டு மூலம் அறியலாம்.

கல்விச் சாலையைப் பற்றி எண்ணாயிரம் என்ற ஊரில் காணப் பெறும் முதலாம் இராசேந்திரனுடைய கல்வெட்டும், செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம் திருமுக்கூடல்

என்ற ஊரில் காணப்பெறும் கல்வெட்டும் விளக்க மாகக் கூறுகின்றன. மருத்துவச் சாலையைப் பற்றித் திருமுக்கூடலில் காணப்பெறும் வீரராசேந்திரனுடைய கல்வெட்டு தெரிவிக்கின்றது. வைத்தியர்களுக்குக் கொடுக்கப்பட்ட "வைத்தியக் காணி", "வைத்திய விருத்தி" பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

ஊராட்சி முறையைப் பற்றி மானூரில் உள்ள மாறஞ்சடையனுடைய கல்வெட்டும், முதலாம் பராந்தக சோழனுடைய உத்தரமேரூர்க் கல்வெட்டும் தெளிவாகக் கூறுகின்றன. உத்தரமேரூர்க் கல்வெட்டு ஊர்ச்சபைக்கு உறுப்பினர்கள் "குடவோலை" முறைப்படித் தேர்ந் தெடுக்கப் பட்டதையும் அவர்களுக்கு வேண்டிய தகுதி களையும் தெளிவாகக் கூறுகின்றது.

நீதிமுறையைப் பற்றித் திருப்பாதிரிப் புலியூரில் கண்டு பிடிக்கப்பட்ட பெருமான் பராக்கிம பாண்டியனுடைய கல்வெட்டு கூறுகின்றது.

கல்வெட்டுகள் பல அரிய செய்திகளைக் கதைபோல் நமக்கு எடுத்து இயம்புகின்றன. அவற்றைப் பாதுகாக்க வேண்டியது நமது தலையாய கடமையாகும்.

# நடுகல் வழிபாடு

காதலையும் வீரத்தையும் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் தமிழர்கள். வீரங்காட்டி, விழுப்புண் பெற்று இறப்பதையே ஒவ்வொரு வீரனும் விரும்பினான். சிறு குழந்தை இறந்தாலும் அதனை வாளினால் கீறித்தான் புதைப்பார்கள்.[1] இவ்வாறு வீரத்தைப் பெருமையாகக் கருதிய தமிழ்மக்கள் வீரத்தோடு போரிட்டு இறந்த வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபட்டனர்.

தொல்காப்பியம் நடுகல் எடுத்தல் பற்றி,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு மரபின் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று மரபில் கல்லொடு புணர

என்ற வரிகளில் கூறுகின்றது.[2] நடுகற்கள் பெரும்பாலும் ஊரின் ஒதுக்குப் புறத்திலேயே அமைக்கப்பட்டன.[3] நடுகற்களை நீராட்டி, நெய் சொரிந்து, நாட்பலி ஊட்டிக் காலையில் வழிபட்டனர்.[4] நடுகற்களுக்கு மயிலின் தோகையைச் சார்த்திக் கள்பெய்து வழி பட்டனர் என்பதைச் சங்க இலக்கியங்களால் அறிய முடிகின்றது.[5] நடுகற்களில் வீரனின் பெயரும் அவனைப் பற்றிய செய்திகளும் பொறிக்கப்பட்டிருந்தன.[6] நெடிய கூந்தலையுடைய பெண்கள் கைகளைக் குவித்துக்கும்பிட்டுப் பரவி நடுகல்லைத் தொழுதனர்.[7]

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை 300க்கும் மேற்பட்ட நடுகற்களை வடார்க்காடு, தர்மபுரி மாவட்டங்களில் கண்டுபிடித்துள்ளது. இவற்றில் பெரும்பாலான நடுகற்கள் இன்றும் வழிபாட்டில் உள்ளன. மக்கள் இந் நடுகற்களைக் கடவுளாக வழிபட்டு வருகின்றனர். இவற்றிற்கு ஆண்டுதோறும் சிறந்த வழிபாடுகள், விழாக்கள் நடத்தப்படுகின்றன. இவற்றின் முன்னர் இருப்பாலான சூலமும் கத்தியும் இன்றும் நட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கும் எண்ணெய் பூசி, மாலை அணிவித்து வழிபடுகின்றனர்.[8]

பெரும்பாலான நடுகற்களில் வீரன் காலருகே காணப்படும் 'கெண்டி' மதுக்குடத்தின் சாயலாகத் தோன்றுகிறது. இந்நடுகற்களின்முன் உயர்ந்த சுடுமண் குதிரைகள் ஆண்டுதோறும் வைக்கப்படுகின்றன. வீரனுக்கு எடுக்கப்பட்ட கல் ஆதலின் குதிரையின் உருவையும் செய்துவைத்து வணங்குவர் போலும். இது தவிர சிறு அளவில் ஆண், பெண், குழந்தைகள் போன்ற உருவங்களும் வைக்கப்பட்டுள்ளன. நோய்வாய்ப்பட்டோர் சுகம் வேண்டி விரதம் முடித்ததின் நினைவாக இவற்றை அளிப்பது மரபு என்பர். இந்நடுகற்களை வழிபடுவதால் நாடு வளம் பெறும் என்றும் குடிமக்கள் சிறப்பெய்துவர் என்றும் மக்கள் கருதுகின்றனர். மழை பெய்யாது நாடு வறண்ட போது இந்நடுகற்களுக்குச் சிறந்த வழிபாடு இன்றும் நடத்துகின்றனர். இதனால் மழை பெய்து வளம் சிறக்கும் என்று நம்புகின்றனர்.[9] சிலப்பதிகாரத்தில் 'குன்றின்மேல் வந்து நின்ற பத்தினிக்குக் கோயில் எடுத்து வழிபாடு செய்யின் வளம் சிறக்கும்'[10] என்று கு(ன்)றவர் கூறியிருப்பது மேற்கூறிய செய்திக்கு அரணாகும்.

நடுகற்கள் வடார்க்காடு, தென்னார்க்காடு, சேலம், தர்மபுரி முதலிய மாவட்டங்களில் 'வேடியப்பன்' என்று அழைக்கப்படுகின்றன. இந்நடுகற்கள் இருக்கும் இடத்தை

'வேடியப்பன் கோயில்' என்றழைக்கின்றனர். வேடர், கிருஷ்ணாரப்பன், மீனாரப்பன், சன்யாசியப்பன் என்று பல பெயர்களிலும் நடுகற்கள் அழைக்கப்படுகின்றன. சில இடங்களில் 'ஆஞ்சநேயர் கல்லு' என்றும் அழைக்கப்படுவது உண்டு. சில சிறப்புப் பெயர்களோடும் நடுகற்கள் அழைக்கப்படுகின்றன. 'நிரை மீட்டான் கோயில்' என்பதையே 'சிறை மீட்டான் கோயில்' என்று அழைக்கின்றார்கள் போலும். (ஆநிரைகளை மீட்டு இறந்த வீரனுக்கு எடுக்கப்பட்ட கல்லாக இருக்கலாம்). ஊமை வேடியப்பன், இரட்டை வேடியப்பன், சாவுமேட்டு வேடியப்பன், நத்தமேட்டு வேடியப்பன் எனப் பல பெயர்கள் காணப்படுகின்றன. ஒரு நடுகல்லில் வீரனின் காலின்கீழ் மாட்டின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. அது மிகச் சிறியதாக முயல்போல் காணப்படுவதால் அதனை 'மொச வேடியப்பன்' என்றழைக்கின்றனர். மற்றொரு நடுகல்லில் வீரனின் காலின்கீழ் கல் உடைந்து காணப்படுகின்றது. இதனை ஊரார் 'நொண்டி வேடியப்பன்' என்றழைக்கின்றனர். 'வேடியப்பன்' என்ற பெயர் மேற்கூறிய மாவட்டங்களில் வேட்டுவர் வாழ்வதால் ஏற்பட்டதோ என ஐயம் தோன்றுகின்றது.[11]

வீரர்களுக்கு மட்டுமின்றி நாய், கோழி ஆகியவற்றிற்கும் நடுகற்கள் எடுத்து வழிபட்டனர். தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறையின் இயக்குநர் திரு. காசிநாதன் அவர்கள் ஒரு கோழியின் உருவம் பொறித்த நடுகல்லைக் கண்டுபிடித்துள்ளார்.

இன்றும் தெலுங்கு மொழி பேசுகின்ற இராச கம்பளத்து நாய்க்கர், சக்கிலியர் முதலிய இனத்தவர்கள் இறந்தவர்களுக்குக் கல்நட்டு வழிபடுகின்றனர். இந்தக் கல்லிற்கு நீராட்டி ஆடு, கோழி முதலியன பலியிட்டு வழிபடுகின்றனர்.

இறந்தவர்களுக்குக் கல்லெடுத்து வழிபடும் வழக்கம் நம் தமிழகத்தில் அன்று தொட்டு இன்றுவரை இருந்து வருகின்றது என்பதை அறிகின்றோம்.

## குறிப்புகள்

1. புறம்—74. வரிகள் 1-2.
2. தொல்காப்பியம், புறத்திணையியல்—1005.
3. புறம்—314 : 2-3.
4. புறம்—329 : 1-5.
5. அகம்—35 : 8-9.
   அகம்—67 : 8-10.
   அகம்—131 : 10-11
   புறம்—232 : 3-6
   புறம்—260 : 25-28.
   புறம்—264 : 1-4.
   புறப்பொருள் வெண்பாமாலை.
6. அகம்—53 : 10-11
   அகம்—67 : 8-10
   அகம்—131 : 10-11
   அகம்—179 : 8.
   புறம்—264 : 3-4
   புறப்பொருள் வெண்பாமாலை.
7. புறம்—306 : 3-4
8. புறப்பொருள் வெண்பாமாலை.
9. டாக்டர். இரா. நாகசாமி, கல்வெட்டியல், பக்-150.
10. சிலப்பதிகாரம், குன்றக் குரவை.
11. டாக்டர். இரா. நாகசாமி, கல்வெட்டியல், பக்-138-139.

# கணப்பெருமக்கள்

## முன்னுரை

முற்காலத்தில் ஊர்களையும் கிராமங்களையும் நிர்வகிக்கப் பல உறுப்பினர்கள் அடங்கிய 'ஆளுங்கணம்' என்ற ஒரு குழு இருந்தது. இக்குழு சில சமயங்களில் குறுகிய அளவில் 'கணம்' என்றும் நெடிய அளவில் 'மீயாளுங்கணம்' என்றும் அழைக்கப்பட்டது.[1] இக்குழுவில் எத்தனை உறுப்பினர்கள் இருந்தார்கள், எவ்வாறு நியமிக்கப்பட்டார்கள் என்பதை அறிந்து கொள்ள முடிய வில்லை.[2] சில கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ள 'ஊர் ஆள்வார்கள்' என்பது 'ஆளுங்கணம்' என்று குறிக்கப் படுவதின் மாற்று வடிவமேயாகும்.[3] கிராம நிர்வாகங் களைக் கவனிக்க இதுபோன்று சில சபைகளும் இருந்தன.

## கணம்

'கணம்' என்பதற்குத் தமிழ் அகராதி கூட்டம், திரண்டோர் என்று விளக்கம் கூறுகின்றது.[4] நாலடியார் 'கணங்கொண்டு சுற்றத்தார்' என்று கூறுகின்றது.[5] கலைக் களஞ்சியத்தில் 'கணம்' என்பதற்குப் 'பதினெட்டுக் கூட்டத்தினரைக் குறிக்கும்' என்று கூறப்பட்டுள்ளது.[6] தொல்காப்பியம் பொருளதிகார உரையில் பேராசிரியர் 'பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண் கணம்' என்று பதினெண் கணத்திற்கு விளக்கம் கூறியுள்ளார்.[7]

எல்லா நூல்களிலும் 'கணம்' என்பது 'கூட்டம்' என்ற பொருளிலேயே வருவது குறிப்பிடத்தக்கது.

சர். மோனியர் வில்லியம்ஸ் தன்னுடைய அகராதியில் 'கணம்' என்பதற்குக் 'கூட்டம்' என்றே பொருள் கூறியுள்ளார்.[8] டூரும் ஃபீல்டு 'கண' என்பதற்கு 'மீ மாவிதான்' என்றும் 'கணம்' என்பதற்குத் 'தேவாநாம் ரிபர சுகஸ்தா' என்றும் 'அஸ்டேரஷி' இஷாம் மா கடஷி' என்றும் பொருள் கூறியுள்ளார்.

மனு 'கண' என்பது மக்கள் அல்லது ஒருத்தொருக்கொருத்தர் உதவி செய்து கொள்கிற கூட்டத்தைக் குறிக்கும் என்று கூறுகின்றார். ரைஸ் டேவிட் என்பவரும் 'கண' என்பதற்குப் பொதுக்காரியததில் ஈடுபட்டிருப்புவர்கள் என்றே பொருள் கூறுகின்றார். ஜெயஸ்வால் மதத்தோடு தொடர்புடைய சில கணங்கள் பற்றிக் கூறியுள்ளார்.[10] ஸ்ரீ கிருஷ்ண கணத்தார், வீரகணத்தார், காளிகணத்தார் முதலியவை தமிழில் மதத்தோடு தொடர்புடைய கணங்கள் என்று நீலகண்டசாஸ்திரி அவர்கள் கூறியுள்ளார்.[11]

### ஆளுங்கணம்—ஆளுங்கணத்தார்

பல்லவர் காலக் கல்வெட்டுகளில் 'கண' என்பது பல உறுப்பினர்கள் அடங்கிய நிர்வாகக் குழுவாகவே குறிக்கப்பட்டுள்ளது. 'ஆளிங்கணம்' என்பது கிராம நிர்வாகங்களைக் கவனிப்பவர்களைக் குறிக்கும்.

நந்திவர்மப் பல்லவனுடைய 23-ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு திருவிப்புரம்பேடு ஆளுங்கணத்தைச் சேர்ந்த முள்ளூர்க்கிழாரி என்பவர் குழைப்பத்தூரைச் சேர்ந்த அக்னிசர்மா என்ற ஆளுங்கண உறுப்பினரிடம் ஒரு நிலத்தை வாங்கித் திருவிப் புரம்பேடு சிவன் கோயிலுக்குக் கொடுத்ததைக் குறிப்பிடுகிறது.[12] நந்திவர்மன்,[13]

நிருபதுங்கவர்மன்,[14] விசயகம்பவர்மன்,[15] ஆகியோர் களுடைய கல்வெட்டுகள் ஆளுங்கணத்தார் பற்றிக் குறிப்பிடுகின்றன.

உத்தரமேரூர்க் கல்வெட்டு கிராம நிர்வாகச் சபை பற்றியும், உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கும் முறை பற்றியும், உறுப்பினர்களுக்கு வேண்டிய தகுதி பற்றியும் கூறு கின்றது.[16] உத்தர மேரூர் நிர்வாகச் சபையிலிருந்த அனைவரும் பிராமணர்கள். 'பிராமணர்களுக்குத் தான மாகக் கொடுக்கப்பட்ட ஊர்களிலுள்ள சபைகளில் பிராமணர்கள் மட்டும் உறுப்பினர்களாக இருந்திருக் கிறார்கள். மற்ற ஊர்களில் இருந்த உறுப்பினர்களைப் பற்றித் தெரியவில்லை.

மானூர்,[17] அரக்கோணம் வட்டம் களத்தூர்,[18] போன்ற இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் ஆளுங் கணத்தார் பற்றிக் குறிப்பிடுகின்றன.

ஆலம்பாக்கத்தில் கிடைத்த பரகேசரிவர்மன் கல்வெட் டொன்று தந்திவர்மன்மங்கலம் ஊர்ச்சபையைச் சேர்ந்த ஓர் ஆளுங்கண உறுப்பினர் அமரேசுவரப் பெருமாள் கோயிலுக்கு விளக்கு வைக்க 16 கழஞ்சு பொன் கொடுத்த தைக் குறிக்கின்றது.[19] இதே ஊர்ச்சபையைச் சேர்ந்த சோமாசி என்பவர் திருமேற்றளிப் பெருமான் கோயிலுக்கு விளக்கு வைக்க 3 மா நிலம் கொடுத்ததை ஆலம்பாக்கம் வரதராசப் பெருமாள் கோயிலிலுள்ள கல்வெட்டுக் கூறு கின்றது.[20] ஆளுங்கண உறுப்பினர்கள் கொடுத்த கொடைகள் பற்றிப் பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## அமிர்தகணம்

அமிர்தகணத்தார் பற்றி முற்காலப் பல்லவர்கள் கல் வெட்டிலோ சோழர்கள் கல்வெட்டிலோ நமக்குக் குறிப்பு கள் கிடைக்கவில்லை. இவர்கள் ஆளுங்கணத்தாருக்கு

உதவியாக இருந்திருப்பார்கள் என்று பல அறிஞர்கள் கருதுகின்றார்கள். அபராஜிதவர்மனுடைய திரு வொற்றியூர் கல்வெட்டில் மட்டும் அமிர்தகணத்தார் குறிப் பிடப்பட்டுள்ளனர். இவ்வூரில் கிடைத்த அபராஜித னுடைய நான்காவது,ஏழாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு கள் கோயிலுக்காக ஆதம்பாக்கம் சபையிடம் கொடுக்கப் பட்ட தங்கத்தை அமிர்தகணத்தார் பெற்றுக் கொண் டதைக் குறிப்பிடுகின்றன [21]

கணப்பெருமக்கள்

கணப்பெருமக்கள் என்பவர்கள் ஊர்க்காரிய நிர்வாகி கள் என்று தமிழ் அகராதி விளக்கம் கூறுகின்றது.[22] ஆனால் கணப்பெருமக்கள் ஊர்க்காரியங்களில் ஈடுபட்ட தற்கு நமக்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. இவர்கள் கோயில் நிர்வாகத்தில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்குப் பல கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன.

செய்யாறு வட்டம் பிரமதேசத்தில் கிடைத்த இராச ராசதேவனுடைய 27-ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு பொந்தை ஆள்வார் கோயிலில் விளக்கு வைக்கக் கொடுக்கப் பட்டக் கொடையைக் கணப்பெருமக்கள் கவனித்து வந்தத தைக் கூறுகின்றது.[23] இதே ஊரில் கிடைத்த ராஷ்டிர கூட மன்னன் கன்னர தேவனுடைய 17 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு பொந்தைப் பெருமானடிகள் கோயிலில் விளக்கு வைக்கக் கணப்பெருமக்களிடம் கொடுக்கப்பட்டப் பொன் கொடையைக் குறிக்கின்றது.[24]

திருச்செங்கோட்டில் கிடைத்த பரகேசரிவர்மன், இராசகேசரிவர்மன் கல்வெட்டுகளும் மற்ற சோழ அரசர் களுடைய கல்வெட்டுகளும் கோயில் விழாக்களில் ஈடுபட்டி ருந்த கணப்பெருமக்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. திருச்செங்கோடு கல்வெட்டுகள் திருவோணக் கணப் பெரு

மக்கள், திருவாதிரைக் கணப்பெருமக்கள், துவாதசி கணப் பெருமக்கள், திருவேகாதசி கணப்பெருமக்கள் போன்ற பிரிவினர்களைக் குறிப்பிடுகின்றன. இது போன்ற பிரிவு கள் வேறு எந்த ஊர்க் கல்வெட்டிலும் குறிப்பிடப்பட வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### திருவோணக் கணப்பெருமக்கள்

திருச்செங்கோட்டில் கிடைத்த பரகேசரிவர்மனுடைய ஆறாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஈரோட்டிலிருக்கும் மணிகண்டி ஒடைய மந்தாளுக்காக அரட்டணக்கன் மகள் திருச்செங்கோட்டுத் திருவோணக் கணப் பெருமக்களிடம் 20 கழஞ்சுப் பொன் கொடுத்து திங்கள்தோறும் திருவோண நாளில் 20 பிராமணர்களுக்கு சந்திராதித்த வரை உணவு ஊட்டப் பணித்ததைக் கூறுகின்றது.[25]

### திருவாதிரைக் கணப்பெருமக்கள்

பரகேசரிபன்மருடைய 26 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு காடன்பூதி மாணிக்கன் தன் மகள் முண்டங் கோனுக்காகத் திருச்செங்கோட்டுத் திருவாதிரைக் கணப் பெருமக்களிடம் 5 கழஞ்சு பொன் கொடுத்து அதன் பலிசை யில் 5 பிராமணர்களுக்குத் திருவாதிரை நாளில் உணவு ஊட்டப் பணித்தான் என்ற செய்தியைக் கூறுகின்றது.[26]

இராசகேசரிவர்மனுடைய 14 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு இளங்கோனடிகள் தேவியார் முரிகாமக்களார், ஏகவீரதிவாகர தேவருக்காகக் காசெட்டாங்கல்லால் 20 கழஞ்சுப் பொன்னைத் திருச்செங்கோட்டுத் திருவாதிரைக் கணப்பெருமக்களிடம் கொடுத்து அதன் பலிசையில் சந்திராதித்தவரை 20 பிராமணர்களுக்குத் திருவாதிரை நாளில் உணவு ஊட்டப் பணித்ததைக் கூறுகின்றது.[27]

துவாதசி கணப்பெருமக்கள்

பராகேசரிபன்மருடைய 27 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு, புகழியூரைச் சேர்ந்த ஒருவனுடைய மண வாட்டி (மனைவி) குமாரிசுந்தரி பிராமணர்களுக்குத் திங்கள் தோறும் துவாதிசி நாளில் உணவு ஊட்டத் திருச்செங் கோட்டுத் துவாதசிக் கணப்பெருமக்களிடம் கொடுத்த கொடையைக் குறிக்கின்றது.[28]

திருவேகாதசி கணப்பெருமக்கள்

இராசகேசரிவர்மனுடைய 13 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு இளங்கோனடிகள் தேவியார் காமக்கனார், காசெட்டாங்கல்லால் 20 கழஞ்சு பொன் திருச்செங் கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப்பெருமக்களிடம் கொடுத்து அதன் பலிசையில் திங்கள்தோறும் திருவேகாதசி நாளில் 20 பிராமணர்களுக்கு உணவு ஊட்டப் பணித்தாள். இதனைத் திருவேகாதசி கணப்பெருமக்கள் கவனித்து வந்தனர்.[29]

முடிவுரை

மேற்காட்டிய சான்றுகளால் கணப்பெருமக்கள் கோயில் நிர்வாகத்தில் தனியிடம் பெற்றிருந்தனர் என்பதை அறிகின்றோம். கிராம நிர்வாகத்தில் எத்தகைய பங்கு வகித்தனர் என்பது பற்றி அறிய முடியவில்லை. அது பற்றி ஆய்வு செய்தல் வேண்டற்பாலதாகும்.

## குறிப்புகள்

1. 3 and 58 of 1898
2. K. A. N. Sastri, The cholas, P. 494.
3. 40 of 1155.
4. தமிழ் அகராதி, தொகுதி II பகுதி I.

5. நாலடியார், 25.
6. கலைக்களஞ்சியம், தொகுதி 3.
7. பேராசிரியர், தொல், பொருள், 256 உரை.
8. Sir. Monier Monier Will ans, A Sanskrit English Dictionary.
9. Bloom Field, Vedic concordance.
'me ma vi trsan'
'devanam rbharah suhastah'
'astosy esam ma cot hase'
10. Dr. C. Minakshi, Administratron and Social life under the Pallavas, p. 150.
11. K.A.N. Sastri, Studies in Chola History; p. 102.
12. Ep. Ind, xi, p. 225.
13. ,,
14. SII, xii, 107
15. ,,
16. 3 and 58 of 1898.
17. Ep. Ind, xxii.
18. 155 and 159 of 1916.
19. SII, xii, 127
20. Ibid 281
21. SII, xii, 88 and 91.
22. தமிழ் அகராதி, II தொகுதி, பகுதி I.
23. 204 of 1915
24. 207 of 1915.
25. SII, xix, 219.
26. SII, xix, 426.
27. SII, xiii, 244.
28. SII, xiz, 427
29. SII, xiii, 232.

# கட்டி முதலிகள்

## முன்னுரை

கொங்குநாடு வடகொங்கு, தென்கொங்கு மீகொங்கு, மழகொங்கு என நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. இந்தப் பிரிவுகளைப் பண்டைய இலக்கியங் களும் கல்வெட்டுகளும் சுட்டுகின்றன. இன்றைய பவானி ஆற்றின் வடக்கில் அமைந்திருந்த பகுதிக்கு வடகரை நாடு என்று பெயர். வடகரை நாட்டிற்கு அடுத்திருந்த நாடு பூவாணி நாடு ஆகும். இன்றைய சங்ககிரி வட்டம், ஓமலூர் வட்டம் ஆகிய வட்டங்களைத் தன்னுள் கொண்டதுபூவாணி நாடு. பூவாணி நாட்டில் அமரகுந்தி, இடைப்பாடி, தாரமங்கலம், இலவம்பட்டி ஓமலூர், சங்ககிரி போன்ற ஊர்கள் தொன்று தொட்டே உள்ளன. அமரகுந்தி பூவாணி நாட்டின் தலைநகராகும்.

## கட்டி முதலிகள்

விசய நகர அரசின் சீர்குலைவுக்குப் பின்னர் பூவாணி நாட்டை ஆண்ட சிற்றரசர்கள் கட்டிமுதலிகள் ஆவர். இவர்களுடைய தோற்றம் பற்றி இதுவரையில் தெளிவான சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை. சில இலக்கியச் செய்திகளையும், பிற்காலக் கல்வெட்டுகளையும் கொண்டே இவர்களைப் பற்றிச் சிறிதளவு அறிந்து கொள்ள முடிகின்றது.

### சங்க இலக்கியச் சான்றுகள்

சங்க இலக்கியங்களில் 'கட்டி' என்ற மரபினர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. குறுந்தொகை, கட்டிநாடு வடுக நாட்டு (கன்னட நாட்டு) எல்லை வரையில் இருந்தது என்று கூறுகிறது.

> "குல்லைக் கண்ணி வடுகர் முனையது
> பல்வேற் கட்டி நன்னாட்டும்பர்"[1]

ஒரு கட்டியரசன் உறையூரையாண்ட தித்தன் வெளியன் என்னும் சோழ அரசன்மேல் போருக்குச் சென்று உறையூர்க் கோட்டையை வெளியனுடைய பிறந்த நாள் விழாக் கொண்டாட்டத்தில் கொட்டப்பட்ட கிணைப் பறையின் முழக்கத்தைக் கேட்டு, போர் செய்யாமல் திரும்பிப் போய் விடுகிறான். இந்தச் செய்தியை அகநானூறு,

> "தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
> பாடின் தெண்கிணைப் பாடு கேட்டஞ்சிப்
> போரடு தானை கட்டி
> பொராஅது ஓடிய ஆர்ப்பு"[2]

என்று கூறுகின்றது.

வட கொங்கு நாட்டின் வடமேற்கில் இருந்த புன்னாட்டின் தலைநகரான கட்டூரின் மேல் சோழனுடைய சேனைத் தலைவனான பழையன் படையெடுத்துச் சென்று போர் தொடுத்தான். புன்னாட்டு அரசனுக்கு உதவியாகப் பழையனை எதிர்த்துப் போர் செய்த கொங்கு நாட்டு அரசர்களில் கட்டியரசனும் ஒருவன். கழுமலத்தில் நடந்த இந்தப் போர்ச் செய்தியை அகநானூறு விரிவாகக் கூறுகின்றது[3]

### சிலப்பதிகாரம்

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

"கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்
வடவாரியரொடு வண்டமிழ் மயக்கத்து"[4]

என்ற அடிகளில் கட்டி மரபினன் ஒருவன் சேரன் செங்குட்டுவனால் வென்று அடக்கப்பட்டான் என்று கூறுகின்றார்.

போரடுதானைக்கட்டி, பல்வேற்கட்டி என்ற பெயர்களைத் தவிர சங்க காலத்திலிருந்த இம்மரபினர் பெயரொன்றும் தெரியவில்லை.

## கல்வெட்டுச் சான்றுகள்

எண்ணூறு ஆண்டுகட்டு முற்பட்ட கல்வெட்டுகளில் கட்டி முதலிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இரண்டாம் சடாவர்மன் சுந்தரபாண்டியனுடைய (கி.பி. 1276–1290) தாரமங்கலத்து முதலிகள்' என்றும், தாரமங்கலத்து 6 முதலிகள்' என்றும் குறிக்கப்பட்டுள்ளனர்.[5] கி.பி. 7, 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நடுகல் ஒன்று எடக்கல்லில் கிடைத்துள்ளது. இது 'குன்றக் கட்டி' என்பவனைக் குறிக்கிறது. சமீபத்தில் தருமபுரி மாவட்டத்தில் 'கட்டிணை பருமர்' கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அரசர்களுக்கும் கட்டி முதலிகளுக்கும் பெயர் ஒற்றுமை மட்டுமே காணப்படுகின்றது. வரலாற்று ரீதியான ஆதாரம் எதுவும் கிடைக்கவில்லை.

## மெய்க்கீர்த்தி

தென்னிந்தியாவில் விசயநகர அரசு சீர்குலைந்த நேரத்தில் ஆங்காங்கு இருந்த சிற்றரசர்கள் அந்தந்தப் பகுதிகளில் தங்களை அரசர்களாக அறிவித்துக் கொண்டனர். அவ்வாறு கட்டி முதலிகளும் தங்களைத் தனி அரசர்களாகப் பறைசாற்றிக் கொண்டனர். இவர்

சனுடைய மெய்க்கீர்த்தி விசயநகர அரசர்களின் மெய்க் கீர்த்தியைப் போன்றதாகும். தாரமங்கலம் (சேலம் மாவட்டம், ஓமலூர் வட்டம்) அருகில் உள்ள இலவம்பட்டி என்னும் கிராமத்தில் கட்டி முதலியார் கல்வெட்டு ஒன்று உள்ளது. அதில் கட்டிமுதலிகளின் சிறப்புப் பேசப் படுகின்றது.

"கொங்கான வீரசோழ மண்டலத்தில்
குன்றத்தூர்ச் சாவடிக்குச் சொல்லாநின்ற
பூவாணிய நாட்டுக் கெல்லூர் பிரதான
ஸ்தலமான தாரமங்கலத்தில் வாழ்ந்திருக்கும்
நாடுவாழி வெள்ளாழர் நிலங்கிழார்
வணங்காமுடி பண்ணிக் குடுத்த வாடாமாலை
புலிக்கொடி வில்க்கொடி மகரக்கொடி சிங்கக்கொடியும்
மன்னவர் வணங்கிலும் தான் வணங்காத
மத்ஸகக் குடோரி விருதும் படைதுகள் வலிமையும்
பெருமை உடைதா வாழ்கின்ற வணங்காமுடி
முதலியார்களில்
ஸ்ரீமந் முதலியார் நல்லுடையப்பர் இம்முடிகட்டி
முதலியார்"[6]

இக்கீர்த்தி கட்டி முதலிகள் அனைவருக்கும் பொதுவான ஒன்றாகும்.

## கட்டிமுதலிகளின் வழிமுறை

சங்க இலக்கியங்களில் போராடுதானைக்கட்டி, பல்வேற்கட்டி ஆகிய பெயர்களைத் தவிர வேறு பெயர்கள் காணப்படவில்லை. பிற்காலத்தில் வேம்பன்கட்டி, இளமன்கட்டி, இம்முடிக்கட்டி, மும்முடிக்கட்டி, சியானக் கட்டி, வணங்காமுடிக்கட்டி என்னும் சில பெயர்கள் தான் காணப்படுகின்றன. இப்பெயர்களைக் கொண்டு கட்டி முதலிகளின் வழிமுறையைத் தெளிவாக வரையறுக்க முடியவில்லை.

### கலைப் பணிகள்

கட்டி முதலிகளின் கலைப் பணிகள் தாரமங்கலம், திருச்செங்கோடு, பவானி ஆகிய இடங்களில் காணப் படுகின்றன. சிற்பவேலை பேசுபவர்கள் 'தாரமங்கலம் தாடிக் கொம்பு என்னும் இரண்டு வேலை நீங்கலாக மற்றும் எந்தக்கோயிற் கற்பணி போலவேனுஞ் செய்து கொடுக்கிறோம். என்று பேசுவது வழக்கமாம்.[7] இத்தகைய சிறப்புப் பெற்ற கட்டி முதலிகளின் கோட்டைகள் ஆத்தூர், அமரகுந்தி ஆகிய இடங்களில் உள்ளன.

### ஆராய்ச்சியாளர் கருத்துகள்

அசோகன் கல்வெட்டில் 'சத்திய புத்திரர்' என்று குறிப்பிடுவது இக்கட்டி மரபினையே என்பர் புலவர் குழந்தை அவர்கள்.[8] கட்டி முதலிகளைத் தொண்டை வேளாளர் என்று ரிச்சர்ட் கூறுகிறார் வெள்ளாளக் கவுண்டர்களுக்கும் 'முதலி' என்று பட்டப் பெயர் உண்டு என்று தர்ஸ்டன் கூறுகின்றார்.[9] கட்டி முதலிகளை வெள்ளாளர்களின் வழித்தோன்றல்களாகக் கருதுவாரும் உளர்.[10] கட்டி பரம்பரையினர் பிற்காலத்திலும், விசயநகர அரசர்கள் ஆட்சிக்காலத்திலும் இருந்தனர் என்றும் அவர் களே 'கெட்டி முதலியார்' என்று பெயர் பெற்றனர் என்றும் மயிலை சீனி. வேங்கடசாமி கருதுகிறார்.[11]

### முடிவுரை

கட்டி மரபினர் பற்றிய குறிப்புகள் நமக்குத் தொடர்ச்சியாகக் கிடைக்காவிடினும், இம்மரபினர் சங்க காலந்தொட்டே கொங்கு நாட்டில் இருந்து வந்தனர் எனக்கூறலாம். கொங்கு நாட்டில் குறுநில மன்னர்களாக இருந்து வந்தவர்களில் கட்டிமுதலிகளும் குறிப்பிடத்தக்க வர்களாவர்.

## குறிப்புகள்


1. குறுந்தொகை, 11:5-6.
2. அகநானூறு, 226:14-17.
3. அகம். 44:7-11.
4. சிலம்பு. 25:156-158.
5. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார், 'தாரமங்கம்', செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-கை, 1934-1925, ப. ம் 402-403.
6. ஆர். பூங்குன்றன், 'தாரமங்கலம்', தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, 19 /9.
7. காரிமேகக் கவிஞர், கொங்கு மண்டல சதகம், பம். 93.
8. புலவர் குழந்தை, கொங்கு நாடு, ப.ம். 162.
9. E. Thurston, Castes and Tribes of Southern India, Vol. V, p-84.
10. Dr. M. Arokiasamy, The Kongu Country, p, 271
11. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்கு நாட்டு வரலாறு, ப.ம், 19-20

# கொங்கு நாட்டில் சமணம்

கொங்கு நாட்டில் சமணம் பல்நெடுங் காலமாக வழக்கத்திலிருந்தது என்பதற்குப் பல ஆதாரங்கள் கிடைத்துள்ளன. சமணக் கோயில்கள், கல்வெட்டுகள், சிற்பங்கள் செப்புத் திருமேனிகள் முதலியன நமக்குச் சான்று பகர்கின்றன.

**கொங்கில் சமணம்:** சந்திர குப்தன் காலத்தில் சமணத் துறவிகள் வட நாட்டிலிருந்து மைசூர் மாநிலத்திலுள்ள சிரவண பெல்லி குளம் என்ற இடத்திற்கு வந்தனர். பின்னர் அங்கிருந்து தமிழகம் நோக்கி வந்தனர்[1] என்று பி.பி. தேசாய் கூறுகின்றார். கி.மு. முதல் நூற்றாண்டில் சிரவண பெல்லி குளத்தில் இருந்த சிம்ம நந்தி என்னும் சமண முனிவர் அப்பகுதியில் சங்க அரசை நிறுவியதாகக் கூறுகின்றனர்.[2] இரண்டொருவர் தவிர, கங்க அரசர்கள் அனைவரும் சமணராகவே இருந்தனர். அதனால் மைசூரில் சமணர் செல்வாக்குப் பெற்றிருந்தனர். கங்கர்கள் கொங்கு நாட்டைக் கைப்பற்றி அங்கும் தங்கள் ஆட்சியை நிறுவினர். கொங்கு நாட்டை ஆண்ட முதல் அரசன் கங்க கொங்கணிவர்மன், இவன் கி.பி. 179 இல் பட்டாபிசேகம் செய்து கொண்டவன்.[3] இவன் காலத்திலும், இவனுக்குப் பிறகு வந்த அரசர்கள் காலத்திலும் கொங்கு நாட்டில் சமண மதம் சீரும் சிறப்பும் பெற்று வளர்ச்சியடைந்தது.

**கொங்கில் சமணக் கோயில்கள் :** கங்க அரசர்கள் காலத்தில் கொங்கு நாட்டில் பல சமணக் குகைகள் குடையப்பட்டன. விசய மங்கலம் அறச்சலூர், ஐவர்மலை, ஆர் நாட்டார் மலை, (புகழியூர்) திருச்செங்கோடு, பருத்தி பள்ளி முதலிய இடங்களில் 'சமணர் குகைகளும் படுக்கை களும் காணப்படுகின்றன. தர்மபுரியிலுள்ள மல்லிகார் சுனன் கோயில் சமணத் தீர்த்தங்கரர் மல்லி நாதருக்கு எடுக்கப்பட்டதாகும்.[4] அதமன் கோட்டையில் இரண்டு சமணக்கோயில்கள் காணப்படுகின்றன.[5]

**கொங்கில் சமணத் திருமேனிகள் :** கொங்கு நாட்டில் பல இடங்களில் சமணச் சிற்பங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. உடுமலை வட்டம் திருமூர்த்திமலையின் அடி வாரத்தில் ஒரு பாறையில் சமணத் தீர்த்தங்கரர் உருவம் காணப்படுகிறது. பருத்திப் பள்ளியில் சமணத் தீர்த்தங்கர ரான ஆதிநாதர் சிலையும் பல சமணர் சிலைகளும் காணப் படுகின்றன. கொடுமுடியில் உள்ள அறப்பள்ளீசுரர் கோயிலிலும் சமணர் சிற்பங்கள் உள்ளன. தாராபுரம் கோட்டை மேட்டில் சில சமணர் சிலைகள் உள்ளன. ஐவர்மலையில் பல சமணர் சிற்பங்கள் உள்ளன. அமணலிங்கம் என்ற பெயரில் பொள்ளாச்சி, உடுமலை வட்டங்களில் சமணச் சிலைகள் வழங்கப்படுகின்றன.

**கொங்கியில் சமணப் பெயர்கொண்ட ஊர்கள் :** கொங்கு நாட்டில் சமணம் பெற்றிருந்த செல்வாக்கைச் சில ஊர்ப் பெயர்களும் பறைசாற்றுகின்றன. பருத்திப் பள்ளி, கூட்டப்பள்ளி, அரியூர், அரியானூர், அரூர், மோளிப்பள்ளி, பள்ளிப் பாளையம், பெரங்கலூர்ப்பள்ளி பராமச்சுரப்பள்ளி, சீனாபுரம், இங்களூர் அரசண்ணா மலை, அருவாப் பள்ளியூர், அறச்சலூர் போன்ற ஊர்ப் பெயர்கள் சமணத்திற்குச்சான்று பகர்கின்றன.

**கொங்கியில் சமணப் பெரியார்கள் :** கொங்கு நாட்டில் பல சமணப் பெரியார்கள் வாழ்ந்திருக்கிறார்கள்.

பெருங்கதையின் ஆசிரியர் கொங்குவேளிர் விசய மங்கலத்தைச் சார்ந்தவர். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் விசயமங்கலத்துக்கு அருகிலுள்ள நிரம்பை என்ற ஊரைச் சார்ந்தவர். நன்னூல் ஆசிரியரான பவணந்தி முனிவர் கொங்கு நாட்டில் உள்ள சீனாபுரத்தைச் சார்ந்தவர்.

கொங்கு நாட்டில் சமண சமயம் மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்கியது.

## குறிப்புகள்

1. P.B. Desai, 'Jainism in South India' p. 3, 18 and 32.
2. புலவர் குழந்தை 'கொங்கு நாடு', ப. ம். 391
3. கொங்கு தேச ராசாக்கள்
4. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.ம். 165.
5. S.E.I. Vol II p. 1212.

# வேளச்சேரி சிவன் கோயில்

## ஊர் அமைப்பு

வேளச்சேரி செங்கை மாவட்டத்தில் சைதை வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊராகும். இவ்வூர் கிண்டிக்கு மேற்கிலும் திருவான்மியூருக்கு அருகிலும் அமைந்துள்ளது. சென்னையிலிருந்து கிண்டி வழியாக இவ்வூருக்குப் பேருந்துகள் செல்கின்றன. இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

வேளச்சேரியில் அமைந்துள்ள தண்டீசுவரமுடைய நாயனார் என்னும் சிவன் கோயிலின் அமைப்பையும் அக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளையும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கோயில் அமைப்பு

கோயிலின் வாயில் தெற்குப் பார்த்து அமைந்துள்ளது கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயில் வாயிலின் நேராக அர்த்த மண்டபம் அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தில் இரண்டு தேவகோட்டங்கள் உள்ளன. தென்புறமுள்ள தேவ கோட்டத்தில் விநாயகரும், வடபுறமுள்ள தேவகோட்டத்தில் துர்க்கையும் வைக்கப்பட்டுள்ளன.

கோயில் விமானம் நாகர அமைப்பில் (சதுர வடிவில்) அமைந்துள்ளது. அடிப்பாகம் உபபீடத்திலிருந்து தொடங்குகிறது. ஜகதி வளைவுகளின்றி நேராக அமைந்துள்ளது. குமுதம் முப்பட்டையாக அமைந்துள்ளது. இதனை 'முப்பட்டைக் குமுதம்' என்பர். கருவறையைச் சுற்றி மூன்று தேவகோட்டங்கள் உள்ளன. தென்புறமுள்ள தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தியும், மேற்குப்புறமுள்ள தேவகோட்டத்தில் லிங்கோத்பவரும் வடபுறமுள்ள தேவகோட்டத்தில் பிரம்மாவும் வைக்கப்பட்டுள்ளனர். லிங்கத்தின் அடியில் பிரம்மாவும் விஷ்ணுவும் உள்ளனர். பிரம்மாவின் வாகனம் அன்னம் லிங்கத்தின் மேற்புறத்தில் காணப்படுகின்றது. துவார பாலகர்கள் நான்கு கைகளுடன் காணப்படுகின்றனர். அம்மன் சந்நதியும் உள்ளது. விமானத்திலுள்ள சிற்பங்கள் சிறப்பு வாய்ந்தனவாகும்.

### கல்வெட்டுகள்

தண்டீசுவரமுடைய நாயனார் கோயிலில் பதினேழு கல்வெட்டுகள் உள்ளன. இவை திருத்தண்டீசுவரர் உண்ணாழிச் சுவரிலும் மகாமண்டபத்திலும் காணப்படுகின்றன. அம்மன் கோயிலிலோ அல்லது கோயிலின் மற்ற பகுதிகளிலோ கல்வெட்டுகள் காணப்படவில்லை. கிடைத்த பதினேழு கல்வெட்டுகளில் முழுமையானவை பன்னிரண்டு. முற்றுப் பெறாத கல்வெட்டுகள் இரண்டு. சிதைந்த கல்வெட்டுகள் மூன்று. கல்வெட்டுகள் அனைத்தும் தமிழ் எழுத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளன. சிற்சில இடங்களில் தமிழ்-கிரந்தம் காணப்படுகின்றது. எல்லாக் கல்வெட்டுகளும் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்றே தொடங்குகின்றன.

### கல்வெட்டுகளின் காலமும் குறிப்பிடும் அரசர்களும்

இக்கோயில் கல்வெட்டுகள் சோழ அரசு, பல்லவ அரசு காலத்தில் பொறிக்கப்பட்டவை. மதுரை கொண்ட இராசகேசரிவர்மன் சுந்தர சோழன், மும்முடிச் சோழன் இராச

ராசன் 1, இராசேந்திரன் I. இராசராசன் II, குலோத்துங்கன் III, இராசராசன் III,ஆகிய சோழ மன்னர்களின் கல்வெட்டு களும் கோப்பெருஞ்சிங்கன் என்ற பல்லவ அரசனின் கல்வெட்டும் இக்கோயிலில் காணப்படுகின்றன. இவ் வரசர்கள் கி.பி. 10-13 நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த வர்கள், எனவே இங்குக் காணப்படும் கல்வெட்டுகள் கி.பி. 10-13 நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டவைகளாகும்.

கோயில் கட்டப்பட்ட காலம்

தண்டீசுவரமுடைய நாயனார் கோயிலில் கிடைக்கும் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தியது மதுரை கொண்ட இராசகேசரிவர்மன் சுந்தர சோழனுடையதாகும். இவனுடைய 5,7 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. எனவே இக்கோயிலைக் கட்டியவன் இவனாகத்தான் இருக்க வேண்டும்.

'செங்கற்பட்டு மாவட்டம்' என்ற நூலில் திரு. சோமலெ அவர்கள் இக்கோயில் கண்டராதித்தனுடையது என்று கூறுகின்றார். ஆனால் கண்டராதித்தனுடைய கல்வெட்டுகள் இக்கோயிலில் நமக்குக் கிடைக்கவில்லை.

இக்கோயிலிலுள்ள சிற்பங்கள் சிறப்பு வாய்ந்தவை லிங்கத்தில் பிரம்மாவின் அன்னம் காணப்படுவதால் இது சிறப்புடையதாகும். அதனால் இக்கோயில் உத்தம சோழன் காலத்தைச் சார்ந்தது என்று டக்ளாஸ் பேரெட் அவர்கள் 'Early chola Art' என்ற புத்தகத்தில் குறிப்பிடு கின்றார். ஆனால் உத்தம சோழனுடைய கல்வெட்டுகள் இக்கோயிலில் நமக்குக் கிடைக்கவில்லை.

எனவே இக்கோயிலைக் கட்டியவன் பற்றி அறிஞர் களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இக் கோயிலில் சுந்தர சோழனின் 5-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுதான் காலத்தால் முந்தியது. எனவே இக் கோயிலைக் கட்டியவன் சுந்தர சோழன் என்று கொள்வது

தவறாகாது. இவ்வாறு கொண்டால் இக்கோயில் கி.பி. 961-ஐச் சார்ந்தது என்று கூறலாம்.

இன்றைய வேளச்சேரி சுமார் 1100 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது சுந்தர சோழனுடைய காலத்தில் புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டு ஊராகவே இருந்து வந்தது. முதலாம் இராசேந்திரன் காலத்திற்குப் பிறகு வெளிச்சேரி ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டு ஊராகக் குறிப்பிடப் படுகின்றது. இரண்டாம் இராசராசன் காலத்தில் வெளிச்சேரி 'கின சிந்தாமணி சதுர்வேதி மங்கலம்' என்றழைக்கப்பட்டது. இவன் காலத்தில் புலியூர்க் கோட்டம் என்பது 'குலோத் துங்க சோழ வளநாடு' என்று மாற்றுப் பெயரில் அழைக்கப் படுகின்றது. கல்வெட்டுகளில் வேளச்சேரி 'வெளிச்சேரி' என்றே குறிப்பிடப்படுகின்றது.

### கல்வெட்டில் இறைவன் பெயர்

பெரும்பாலும் எல்லாக் கல்வெட்டுகளிலும் இறைவன் 'திருத் தண்டீசுவரர்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளார். முதலாம் இராசராசன் கல்வெட்டு 'திருத்தண்டீசுவரத்து திருக்கற்றளி மகாதேவர்' என்று இறைவனைக் குறிப்பிடு கின்றது. முதலாம் இராசேந்திரன் கல்வெட்டு 'திருத் தண்டீசுவரமுடைய தேவர்' என்று குறிப்பிடுகின்றது. மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டில் இறைவன் 'திருத் தண்டீசுவரமுடைய நாயனார்' என்றும், 'திருத்தண்டீசுவர முடைய மகாதேவர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளார். மூன்றாம் இராசராசன், பல்லவமன்னன் கோப்பெருஞ் சிங்கன் ஆகியோர் கல்வெட்டுகளில் இறைவன் 'உடையார் திருத்தண்டீசுவரமுடைய நாயனார்' என்று குறிப்பிடப் பட்டுள்ளார்.

## கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ள கொடைகள்

தமிழகக் கோயில் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை அக்கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட கொடைகளைப் பற்றியே குறிப்பிடுகின்றன. 'பெரும்பாலான கல்வெட்டுகள் சந்தி விளக்கு அல்லது நொந்தா விளக்கு எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட கால்நடைகள், திருவமுதுக்காகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் ஆகியவற்றைக் குறிக்கின்றன.

தண்டீசுவரமுடைய நாயனார் கோயிலில் உள்ள ஐந்து கல்வெட்டுகள் சந்திராதித்தவரை நொந்தா விளக்கு எரிப்ப தற்குச் சாவா மூவா பேராடுகள் 90 கொடுத்ததைக் குறிக் கின்றன. இக்கொடை கொடுத்த ஐவருள் மூவர் ஆண்கள். இவர்கள் வெளிச்சேரி ஊர்ச்சபையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் 'ஆளுங்கணத்தார்' என்று குறிக்கப்படுகின்றனர். மற்ற இருவர் பெண்கள். ஒருவர் உள்ளூர் ஆளுங்கணத்தா ரின் மனைவி. மற்றொருவர் வைசாவிப்பாடி ஊர்க் குறும்பைச் சேர்ந்த ஒருவரின் தாயார்.

வேறொரு கல்வெட்டு 23 காசு கொடுத்து ஒரு நொந்தா விளக்கு எரித்ததைக் குறிக்கின்றது. மற்றொரு கல்வெட்டு ஆற்றூர் கூற்றத்தைச் சேர்ந்த சகோதரர்கள் திருவமுதுக்காகக் கொடுத்த நிலத்தின் வருவாயின் ஒரு பகுதியின் மூலம் நொந்தா விளக்கு எரிக்கக் கொடுத்த தைக் குறிக்கின்றது.

சந்திராதித்தவரை ஏற்றப்பட்ட சந்தி விளக்குக் கொடுத்த கொடைகள் பற்றி ஐந்து கல்வெட்டுகள் கூறுகின்றன.

இரண்டாம் இராசராசன் காலத்திய கல்வெட்டு வெளிச்சேரியைச் சேர்ந்த கரணத்தார் ஒருவரின் குமாரர் இக்கோயில் இறைவன் திருத்தண்டீசுவரருக்கு இரண்டு சந்தி விளக்குகள் எரிப்பதற்குப் பழங்காசுகள் ஐந்து கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது.

பல்லவ மன்னன் கோப்பெருஞ்சிங்க தேவன் காலத்திய கல்வெட்டு 'ரேங்குடிஇல் மருதுடையான் சோறன் அரியாயாதணன்' இன்னாயனாரீக்குச் சந்திராதித்தவரை சந்தி விளக்கு எரிக்கக் கொடுத்த பணம் ஒன்பது பற்றிக் கூறுகின்றது.

முதலாம் இராசராசன் கல்வெட்டு, மூன்றாம் இராசராசன் கல்வெட்டு முதலியன சந்தி விளக்கு எரிக்கக் கொடுத்த கொடையைப் பற்றிக் கூறுகின்றன.

## செல்லியம்மன் கோயில்

சிவன் கோயில் குளத்தை அடுத்து ஏரிக்கரையில் இக் கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் உண்ணாழியின் பின்புறச் சுவரில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. ஒன்று 'கோபார்த்திவேந்திராதி' என்ற குறுநில மன்னனின் 1பஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு. இவன் சுந்தர சோழனுக்குப் பாண்டிய நாட்டுப் போரில் உதவியவன்.

இன்று செல்லாயி, செல்லியம்மன் என்றழைக்கப்படும் இக்கோயில் உறைதெய்வம் சுந்தரசோழன் காலத்தில் 'சப்தமாத்திரிகர்' என்று அழைக்கப்பட்டமையை இக் கோயிலில் உள்ள கல்வெட்டால் அறிகின்றோம். இக்கல் வெட்டு இக்கோயில் தெய்வத்திற்குத் திருவமிர்துக்காகச் சேரழநாட்டு மழநாட்டு திருவெட்பூர் ஊரினரால் கொடுக்கப்பட்ட நிலக்கொடையைக் குறிப்பிடுகின்றது. மற்றொரு கல்வெட்டு 'கோப்பரகேசரி பன்மர்க்கு' என்று குறிக்கின்றது. இக்கல்வெட்டின் எழுத்தமைதி கொண்டு பார்த்தால் உத்தமசோழன் காலத்ததுபோல் தோன்று கின்றது.

## விஷ்ணு கோயில்

வேளச்சேரி தெலுங்கு பிராமணர் தெருவில் கிழக்குப் பார்த்து இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின்

அர்த்தமண்டபவிதானத்தில் இரண்டு சிதைந்த கல் வெட்டுகள் உள்ளன. ஒரு கல்வெட்டு இராசராசனின் 26ஆவது ஆட்சியாண்டையும் அவனது மெய்க்கீர்த்தியை யும் கூறுகின்றது. மற்றொரு கல்வெட்டும் பாதியாகவே உள்ளது. முதலாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் வரும் சொற்கள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டில் காணப்படும் அரைகுறைச் சொற்களைக் கொண்டு இது சாவா மூவா பேராடு கொடையைக் குறிக்கின்றது என்று கூறலாம்.

முடிவுரை

வேளச்சேரி கோயில் சிறிதாக இருந்தாலும் அழகாக வும் நல்ல சிற்பங்களை உடையதாகவும் விளங்குகின்றது. இக்கோயில் கல்வெட்டால் ஊர்சபை இருந்ததை அறிகின் றோம். இரண்டாம் இராசராசன் கல்வெட்டால் இவ்வூர் பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்டதை அறிகின்றோம். (சிந்தாமணி சதுர்வேதி மங்கலம் என்று கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது). இக்கோயில் போற்றிப் பாதுகாக்கப் படவேண்டிய ஒன்றாகும்.

# கொங்குக் கோயில்களுக்கு வரி நீக்கம்

## முன்னுரை

முற்காலத்தில் கோயில்கள் அரசுக்கு ஏராளமான பணங்களை வரியாகக் கொடுத்து வந்தன. கோயில் வரிகளே அரசாங்கத்தின் கருவூலங்கள் நிறைவதற்குக் காரணமாக இருந்தன. கோயில்களுக்குச் சொந்தமான நிலங்களும் இருந்தன. அவற்றிலிருந்தும் அரசுக்கு வரிப்பணங்கள் கிடைத்தன. அரசன் கோயில் வரிப் பணங்களையே தானங்களுக்கும் நிர்வாகச் செலவுகளுக்கும் மிகுதியாகப் பயன்படுத்தி வந்தான். எனவே கோயில் வரிப்பணங்களே அரசாங்கத்தின் செலவுகளுக்குப் பெரிதும் பயன்பட்டன என்று கூறுவது மிகையாகாது.

## குலோத்துங்க சோழதேவன்

இவன் கொங்குச் சோழர்களில் மிகவும் சிறந்தவன். கி.பி.1149 முதல் கி.பி.1183 வரை அரசாண்டவன். இவனும், இவனுக்குப் பின் வந்தவர்களும் கொங்கு நாட்டை மிகவும் மேன்மை நிலைக்குக் கொண்டு வந்தனர். இந்த அரசனுடைய கல்வெட்டுகள் கொங்கு நாட்டின் பல பகுதிகளிலும் காணப்படுகின்றன. அவிநாசி, சேவூர், முத்தூர், திங்களூர், பாரியூர், விசயமங்கலம், சத்தியமங்கலம், திருமுருகன் பூண்டி, கீரனூர், அன்னூர், நடுவாச்சேரி, காவேரிபுரம்

முதலிய இடங்களில் இவ்வரசனுடைய கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவனுக்கு இராசகேசரிவர்மன்,[1] திரிபுவன சக்கரவர்த்திகள், கோனேரின்மை கொண்டான், திரிபுவன வீரதேவன்[2] போன்ற பட்டப்பெயர்கள் காணப்படுகின்றன. இவ்வரசன் பெயர் கொண்ட ஊர்களும் ஆலயங்களும் இருந்தன. குலோத்துங்க சோழநல்லூர்[3] குலோத்துங்க சோழீசுவர முடையார்[4] முதலிய பெயர்களைக் கல்வெட்டுகளில் காண்கின்றோம்.

## கோயில்களுக்கு வரி நீக்கம்

குலோத்துங்க சோழனுடைய மூன்றாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்று கோவை மாவட்டம் கோபி வட்டம் பாரியூரில் கிடைத்துள்ளது.[5] பாரியூர் அமரவிடங் கேசுவர் கோயிலில் உள்ள இக்கல்வெட்டில் வட கொங்கின் இருபது நாடுகள் குறிக்கப்பட்டுள்ளன. அந்நாடுகளில் உள்ள சிவாலயங்களின் வருமானம் கோயில்களின் நாட்படிச் செலவுக்கே போதுமானதாய் இருப்பதால், அக்கோயில்கள் அரசுக்குச் செலுத்திவரும் ஒட்டச்சு என்ற வரியை நீக்கி விட்டதாக, அவ்விருபது நாடுகளின் காணியாளர்களுக்கும் கோயில்களின் தானத்தார்களுக்கும் அரசன் ஆணையிட்டு ஓலை அனுப்பிய செய்தியைக் கல்வெட்டு குறிக்கின்றது. மற்றும் ஓலை கொண்டு வருபவர்களுக்கு ஒரு பணம் கொடுக்கவேண்டும் என்றும் கல்வெட்டு குறிக்கின்றது.

## கல்வெட்டு

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கிறவற்த்தி கோனேரின்மைக் கொண்டான் வடகொங்கில் நரயனூர் னாடு அடிக்களித்த மாரனூற் றாசறாசபுறமும் பொங்கலூற்க்கால் னாட்டில்... அலங்கயும் தனிச்சையும் பொங்கலூற்க்கால் னாடு தெங்கரை னாடும் அண்டனாடு தலையூற் னாடும் வடகரை மணலூர்னாடும் இடப்பிறத்தி னாடும் காங்கய னாடும்

வீறசோழவள னாடும் வலுப்புக்காற னாடும் காஞ்சிக் கோவில் னாடும் பூந்துரை னாடும் கீள்பற னாடும் வடகரை னாடும் இன்னாடுகளில் உள்ள காணியாளற்களுக்கும் தானத்தார்களுக்கும் திருபாண்டி கொடுமுடி தானத்தாருக்கும் திருமுக்கூடல் தானத்தாருக்கும் திருவெஞ்சமான்கூடல் தானத்தாருக்கும் அவினாசி ஆளுடகோயில் தானத்தாருக்கும் மன்னியூற் தானத்தாருக்கும் னம்மோலை குடித்தபாடியாவது. இன்னாடுகளில் திருக்கோயில் ஒளாட்டச்சு மூன்று முன்பு இறுத்துப் போதுகையாலே... திருக்கோயில்களுக்கு பூசையும் அமுதுபடியும் இன்ற திருக்கோயில் திருக்காப்புக் கொண்டு இறையறாது பொங்கையில் மூனாசவ னூலதி ளுகெஉ பலுள்ள ஒட்டச்ச எனெந்தோ மதுக்குடு னாயனாருக்கு தாங்காட்டுக் குடுத்த வறாம் பினட்டிக்கி னம் மோலையிட்டு தண்டக் கடவதல்லவாகவும் னாடு பிடித்த றாசா மந்திரிகளுக்கு வென்றுக்கு கொள்ளுக்குக் கடவாற்களாகவும் னம் மோலை குடுத்த வசமவற்களுக்கு னம் மெளுத்திட்டுக் குடுத்தோம் கடன... முத்து விட்டும் ஓலைக்கிப் பணம் ஒன்று னாம் யெழுதிட்டு போய் சொல்லிவிடும் ஓலைக்கிப் பணம் ஒன்றும் குடுத்துப் போவாற்களாகவும் னம்ம துறத்தனத்துக்கு யளிவாவு சோறிடக் கடவாற்களாகவும் யிவற்களுக்கு கை அரிசி யளிக்கக் கடவாற்கனல்லவாகவும் இப்படி யாண்டும் குடுத்தபோது குடுத்தபோது குடுப்பாற்கள் இப்படிக்க னம்ம னைவற்கள தந்த அச்சு வரனூரும் தொண்ட மானாருக்குக் காரியவசத்துக்கு தந்த அச்சனூருமாக அச்சு எழுனூறும் னம் மோலைப்படி பெற்றாற்களுக்கு குடுக்கையிய் இவ்வச்சுக்கு பத்து வாற அச்சுதிரக் கடவாற்களல்லவாகவும் இப்படிக்கி செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொள்வாற்களாகவும் இப்படிக்கி பிடிபாடாக னம்மோலை குடும்தோம் திருபுவன வீற தேவற்கு ஆண்டு மூன்றாவது நாட்ப்பத்து இவை தொண்டமானெழுத்து இவை குறுகுலறாயன் யெழுத்து இவை வேளாவுடையான் யெழுத்து பன் மகேசுபர றக்ஷை.

முடிவுரை

இக்கல்வெட்டு கோயில்களுக்கும் அரசியலுக்கும் இருந்த தொடர்பினைக் காட்டுகின்றது. கோயில்களே அரசின் கருவூலமாக விளங்கின. இதனால்தான் நம் நாட்டின் மீது படையெடுத்த அந்நியர்களும் கோயில்களையே முதலில் சூறையாடினர். நம் பண்டைய அரசர்கள் கோயில் நிர்வாகத்தில் கண்ணும் கருத்துமாக இருந்திருக்கிறார்கள். அதனால்தான் கோயில்களின் வருமானம் குறைந்தபோது அவற்றிற்கும் வரிநீக்கம் கொடுக்க முடிந்திருக்கிறது. எனவே கோயில்களே அரசின் கண்கள் என்பது மிகையாகாது.

## அடிக்குறிப்புகள்

1. ARE 171 of 1909
2. ARE 186 of 1909
3. ARE 131 of 1920
4. ARE 124 of 1920
5. தென்னிந்திய கோயிற் சாதனங்கள் பாகம் 1, எண் 291, பக். 269.
6. மூலக் கல்வெட்டில் குறில்-நெடில் மாற்றங்கள் மட்டும் செய்யப்பட்டு, கல்வெட்டு அப்படியே இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

துணை நூல்கள்;

1. புலவர் குழந்தை, 'கொங்கு நாடு'.
2. கோவை கிழார் கோ. ம. இராமச்சந்திரஞ் செட்டியார், 'கொங்கு நாட்டு வரலாறு', முதற் பாகம்.



# நெருக்கடிக் கால நிவாரணச் சேமிப்பு

## முன்னுரை

நெருக்கடி நிலைமையைச் சமாளிக்க இன்று ஒவ்வொரு நாட்டிலும் நிதி சேசரிக்கப்படுகின்றது. முதலமைச்சர் நிதி, பிரதம மந்திரி நிவாரணநிதி போன்ற பெயர்களில் நிதிகள் வசூலிக்கப்படுகின்றன. இன்று சேமிப்புப் பற்றித் தீவிரமாக விளம்பரப்படுத்தப்படுகின்றது. சேமிப்பு எக்காலத்திற்கும் இன்றியமையாத ஒன்றாகும். கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் நெருக்கடிக்கால நிலைமையைச் சமாளிக்க வேண்டித் தானியம் சேகரித்து வைக்கப் பட்டதைக் கல்வெட்டால் அறிகின்றோம்.[1]

## முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன்

இவன் பாண்டிய மன்னர்களுள் மிகவும் சிறந்தவன். கி.பி. 1251 முதல் கி.பி. 127ı வரை ஆண்டவன். இவன் 'எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்' என்றும், 'கோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கர வத்திகள்' என்றும், கல்வெட்டுகளில் குறிக்கப் பட்டுள்ளான்.[2] கொங்கு நாட்டில் இம்மன்னனுடைய கல்வெட்டுகள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

### நெருக்கடிக் கால நிவாரணச் சேமிப்பு

பல்லடம் வட்டம் பெருமாநல்லூரில் உள்ள உத்தமேச்சுரசுவாமி கோயில் அர்த்த மண்டபத்தின் தெற்குச் சுவரில் ஒரு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு சுந்தரபாண்டியனுடைய 8 ஆவது ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்டது, இக்கல்வெட்டு பெருமாநல்லூர் ஊர் மக்கள் ஊர்ச்சபையிடம் நெருக்கடிக் கால நிவாரணத்திற்காகச் செலுத்திய நெல்லைப் பற்றிக் கூறுகின்றது.

### கல்வெட்டுச் செய்தி

நல்லூர் என்கின்ற அமரபுயங்கரச் சதுர்வேதி மங்கலத்துச் சபை நெருக்கடிக் கால நிலைமையைச் சமாளிக்க ஆண்டு தோறும் இரண்டு தவணையாக, ஐப்பசி–கார்த்திகை மாதத்தில் அறுவடையாகும் கார் நெல்லில் 25 கலமும், சித்திரை மாதத்தில் அறுவடையாகும் பாசனம் நெல்லில் 25 கலமும் ஒத்தனூர் என்கின்ற பெரும்பழனத்தது ஊர்ச் சபைக்குச் செலுத்துவதாக எழுதிக் கொடுத்ததாகக் கல்வெட்டு குறிக்கின்றது. கொங்கு நாடு வீரசோழ வளநாடு என்று குறிக்கப்பட்டுள்ளது. ஒத்தனூரான பெரும்பழனத்தும் வடபரிசார நாட்டைச் சார்ந்ததாக குறிக்கப்பட்டுள்ளது.

### கல்வெட்டு

"கோச்சடைப்பன்மரான திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு ஆண்டு அ. இதன் வையாசி நய வீரசோழ வள நாட்டு...ஸ்ரீ நல்லூரான அமரபுயங்கர சதுர்வேதி மங்கலத்து சபையோம் வடபரிசார நாட்டு ஒத்தனூரான பெரும்பழநத்து ஊரும் ஊராற்களுக்கும் நாங்கள் வாழ்வு திட்டுக் குடுத்த பரிசாவது யெங்களூர்...நலிவு படுகையில் யெங்கள் ஊர் நலிவுபடாமல் இவர்கள் பரிசரத்துக் கொள்வதாக ஆண்டு ஒன்றுக்கு ஊராடு

காலால் வாழ்வு இருந்தும் பொதுனெல்லு ருப கலம் இன்னெல்லு அஞ்பதிங் கலமும் காரீ பாதி பசானம் பதியாக ஆண்டொன்றுக்கு அளக்கக் கடவரார்களாகவும் அளக்கு மெடத்தில் இதற்க்கெதிராவது முதலாண்டு தோறும் யெங்களுக்கு நலிவு வராமல் இவர் மக்கள் எங்கள் மக்கள் சந்திராதித்த வரையில் அளப்போமாக செம்பிலும் சிலையிலும் வெட்டிக்கொள்வார்களாகவும் குடுத்தோம் பெரும்பழன ஊரும் ஊராளிகளுக்கும் நல்லூரான அமர புயங்கர் சதுர்வேதிமங்கலத்துச் சவையாரும் இடம் பரமேசுவர ரக்ஷை"

முடிவுரை

இக்கல்வெட்டு நலிவு உண்டாகும் காலத்தில் அவற்றைச் சமாளிக்கக் கிராம மக்கள் முன்னெச்சரிக்கை யாக ஊர்ச்சபையாரிடம் நெல் கொடுத்துச் சேமித்து வைத்ததைக் குறிக்கின்றது. சேமிப்பு என்பது புதிதன்று. அது பன்னெடுங் காலமாக மக்களிடம் இருந்தது என்பதை இக்கல்வெட்டால் அறிகின்றோம். கொங்கு நாட்டு மக்கள் என்றும் திட்டமிட்டு முன்னெச்சரிக்கையாகச் செயல்படுவார்கள் என்பதற்கு இக்கல்வெட்டு ஒரு சான்றாக அமைகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ள 'ஊராடு கால்' என்னும் அளவு எவ்வளவு என்பது விளங்கவில்லை. பல அளவுகள் மக்களிடம் இருந்ததை இதனால் அறிகின்றோம்.

## அடிக்குறிப்புகள்

1. தென்னிந்திய கோயிற் சாசனங்கள், பாகம் 1, எண் 332.
2. டி. வி. சதாசிவ பண்டாரத்தார், 'பாண்டியர் வரலாறு' ப-ம். 126.

# கொங்குநாடு ஒரு தனி நாடு

## முன்னுரை

கொங்கு நாடு பன்னெடுங் காலமாகவே ஒரு தனி நாடாகவே வழங்கப் பெற்று வந்திருக்கிறது. தமிழகத்தை சேர, சோழ, பாண்டியர் ஆண்டனர் என்றாலும் கொங்கு நாடு ஒரு தனி நாடாகவே இருந்து வந்திருக்கிறது. மூவேந்தர்கள் அவ்வப்போது கொங்கு நாட்டைக் கைப் பற்றினாலும், இதனை ஒரு தனி நாடாகக் கொண்டு, தனிப் பிரதிநிதிகளை நியமித்து ஆட்சி செலுத்தி வந்தனர். சங்க இலக்கியங்களும் பிற்கால இலக்கியங்களும் கல்வெட்டு களும் கொங்கு நாடு ஒரு தனி நாடாக இருந்ததற்குச் சான்று பகர்கின்றன.

## கொங்கு நாடு ஒரு தனி நாடு

கொங்கு நாடு மிகவும் தொன்மையான ஒரு நாடாகும். இங்கு பன்னெடுங்காலமாகவே தனியாட்சி நடைபெற்று வந்திருக்கிறது. கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் இதற்குச் சான்றுகள் பல உள்ளன.

## கல்வெட்டுச் சான்றுகள்

அசோகன் கல்வெட்டில் தமிழகத்து அரசர்களாகச் சோழர், பாண்டியர், கேரளபுத்திரர், சத்தியபுத்திரர் ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் சத்திய

புத்திரர் என்பார் கொங்கு நாட்டு மன்னரே ஆவர் என்பர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள்.[1]

சோழர், பாண்டியர் காலக் கல்வெட்டுகள் பல கொங்கு நாட்டை அம் மன்னர்கள் கைப்பற்றியதைக் குறிக்கின்றன.[2] இதனால் கொங்கு நாடு ஒரு தனி நாடாக இருந்தது என அறிகின்றோம்.

### செப்பேட்டுச் சான்று

பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகனுடைய வேள்விக்குடிச் செப்பேடு கோச்சடையன் ரணதீரன் என்னும் பாண்டிய மன்னனைக் 'கொங்கர் கோமான்' என்று புகழ்கிறது.[3] இதனால் தனிநாடாக இருந்த கொங்கு நாட்டை அம்மன்னன் கைப்பற்றினான் என அறிகின்றோம்.

### இலக்கியச் சான்றுகள்

#### சங்க இலக்கியங்கள்

அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய சங்க நூல்களில் கொங்குநாடு தனியாட்சி நாடாகத் திகழ்ந்ததற்குப் பல சான்றுகள் உள்ளன.

'வாடாப் பூவின் கொங்கர் ஓட்டி நாடு பல தந்த பசும்பூண் பாண்டியன்' (அகம். 253), 'கொங்கு புறந்தந்த கொற்ற வேந்தே' (புறம்-373), 'ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த வேல்கெழு தானை வெருவரு தோன்றல்' (பதிற்-22) போன்ற சங்கப் பாடல் வரிகள் கொங்கு நாடு தனி நாடாக இருந்ததற்குச் சான்றாகின்றன.

#### சிலப்பதிகாரம்

கொங்கு நாடு தனி நாடாகத் திகழ்ந்ததற்குச் சிலப்பதிகாரத்திலும் பல சான்றுகள் உள்ளன.

'கொங்கர் செங்களத்துக் கொடுவரிக் கயற்கொடி
பகைப்புறத்துத் தந்தனராயினும்' (சிலம்பு 25: 153-4)

'குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும்
கடல் சூழிலங்கைக் கயவாகு வேந்தனும்'
(சிலம்பு 30 : 159-60).

'கொங்கச் செல்வி குடமலையாட்டி
தென்றமிழ்ப் பாவை' (சிலம்பு 12 ; 47-8).

தேவாரம்

சுந்தரர் தேவாரத்தில் கொங்குநாடு பற்றிப் பல குறிப்புகள் வந்துள்ளன.

'கொங்கே புகினுங் கூறை கொண்டாறலைப் பாரிலை'

'கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்'

பெரியபுராணம்

சேக்கிழார் தம் பெரியபுராணத்தில் பல இடங்களில் கொங்கு நாட்டைக் குறிப்பிட்டு உள்ளார்.

'குரவலர் சோலை அணி திருப்பாண்டிக் கொடுமுடி அணைந்தார் கொங்கில்'[4]

'கொங்கிற் குடபுலஞ் சென்றணைந்தார்'[5]

குலசேகராழ்வார் தம்மைக் கொல்லிக்காவலர், கொங்கர் கோமான் என்று கூறிக் கொள்வதால் அவர் கொங்கு நாட்டின் ஒரு பகுதியாகிய கொல்லி மலைக்குக் காவலராக இருந்தார் என அறிகின்றோம்.

பிற்கால இலக்கியங்களிலும் கொங்கு நாடு பற்றிய குறிப்புகள் உள்ளன. அருணகிரிநாதர் தம் திருப்புகழில் கொங்குநாடு சேரருக்கு உரியது என்று கூறியுள்ளார்.

'சேரர் கொங்கு வைகாவூர் நனாடதில்' என்று அவர் திருப்புகழில் கூறியுள்ளார். இதனைக் கொண்டு பிற்காலப் புலவர்களும் கொங்கு நாடு சேரருக்கு உரியது என்று பாடிப் போந்தனர். கொங்கு நாட்டின் தென்மேற்குப் பகுதியைச் சேரர் கைப்பற்றியிருக்கக்கூடும். அதனால் அருணகிரியார் அவ்வாறு பாடியிருப்பார். அதனைக் கொண்டு கொங்கு நாடு சேர நாட்டின் ஒரு பகுதி எனக் கூறுதல் பொருந்தாது. சேர நாட்டாரின் பழக்க வழக்கங் களும் கொங்கு நாட்டாரின் பழக்க வழக்கங்களும் மாறு பட்டுக் காணப்படுகின்றன. எனவே கொங்கு நாடு ஒரு தனி நாடு என்று கொள்ளுதலே பொருந்தும்.

மற்றும் பிற்காலத்தே சோழரும் பாண்டியரும் கொங்கு நாட்டைப் பிடித்து, அங்குத் தங்கள் பிரதிநிதி களை நியமித்து ஆட்சி செலுத்தினர். அவர்கள் கொங்குச் சோழர் எனவும் கொங்குப் பாண்டியர் எனவும் பெயரும் பெற்றுள்ளனர். இதனால் கொங்கு நாடு ஒரு தனி நாடாக இருந்திருக்க வேண்டும் என அறிகிறோம்.

முடிவுரை

மேலே கூறியவற்றான் கொங்கு நாடு ஒரு தனி நாடாகத் திகழ்ந்தது என்பது தெளிவு. கொங்கு நாடு அவ்வப்போது மூவேந்தர்களுடைய ஆட்சியின் கீழ் இருந்தாலும் தனி நாடாகவே கருதப்பட்டு வந்தது குறிப் பிடத்தக்கது. எனவே கொங்கு நாடு ஒரு தனி நாடாகத் திகழ்ந்தது என்பதில் ஐயமில்லை.

## குறிப்புகள்

1. டாக்டர் மா. இராசமாணிக்கனார். 'இலக்கிய வரலாறு' ப.ம். 56
2. புலவர் குழந்தை, 'கொங்கு நாடு' ப. ம். 81
3. பாண்டியர் செப்பேடுகள் பத்து. ப.ம். 40
4. பெரியபுராணம், ஏயர்கோன், பாடல். 85
5. பெரியபுராணம், திருஞான சம்பந்தர். பாடல் 323.

துணை நூல்கள்

1. புலவர் குழந்தை 'கொங்கு நாடு'
2. கோவைகிழார் இராமச்சந்திரஞ் செட்டியார் 'கொங்கு நாட்டு வரலாறு' முதற்பாகம்
2. மயிலை சீனி. வேங்கடசாமி 'கொங்கு நாட்டு வரலாறு'

# கல்வெட்டில் சமுதாயச் சட்டம்

### முன்னுரை

சட்டம் என்பது எல்லாச் சமுதாயத்திற்கும் பொது வானதாகும். ஒரு சமுதாயத்திற்கு ஒரு வகையான சட்டம்; மற்றொரு சமுதாயத்திற்கு வேறொரு வகையான சட்டம் என்ற அமைப்பு இல்லை. இது இன்றைய நிலை. ஆனால் நம் கல்வெட்டுகள் காட்டும் சமுதாயச் சட்டமோ இதற்கு முற்றிலும் மாறுபட்டது. இன்ன சமுதாயம் இவ்வாறு தான் நடந்துகொள்ள வேண்டும் என்று சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. இம்முறை இன்றைய வழக்கத்திற்கு முரண்பட்டதாகத் தோன்றலாம். ஆனால் அன்றைய சூழ்நிலையில் அவை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டன. ஏனெனில் அன்று அரசன் எல்லோருக்கும் தலைவனாக விளங்கினான். அவன் இட்டதுதான் சட்டம். அதை மக்கள் அவ்வாறே மேற்கொள்ள வேண்டியிருந்தது. இன்றைய அரசோ ஜனநாயக அரசு. மக்கள் பிரதிநிதிகள் ஆட்சி செய்கின்றனர். அதனால் எச்சட்டத்தைக் கொண்டும் எச்சமுதாயத்தையும் கட்டுப்படுத்த முடியாது.

### சமுதாயச் சட்டம்

கி.பி. 1 -ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த இரண் டாம் இராசாதிராசனின் 14-ஆம் ஆட்சி ஆண்டுக்

கல்வெட்டு ஒன்று சமுதாயச் சட்டம் பற்றி விரிவாகக் கூறுகின்றது.[1] தஞ்சை மாவட்டம் அச்சாபுரத்தில் கிடைத்த இக்கல்வெட்டு பஞ்சவன் மகாதேவி என்கின்ற குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்தில் உள்ள சபையோர் பல இனத்தவர்களுக்கு நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் பற்றிக் குறிக்கின்றது.

பெண்களுக்கு வழங்கப்பட்ட உரிமைகள்

இன்று பெண்களுக்குப் பல உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. ஆண்களோடு சரிசமமாக வைத்துப் போற்றப்படுகின்றனர். எங்கும் சமம்; எதிலும் சமம்; என்ற நிலை உருவாகியுள்ளது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டிலும் பெண்களுக்குப் பல உரிமைகள் வழங்கப்பட்டிருந்தன.

இரண்டாம் இராசாதிராசனின் 14-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு பெண்களுக்குக் வழங்கப்பட்டிருந்த உரிமைகளைத் தெளிவாகக் குறிக்கின்றது. ஒருவனை மணந்து கொண்ட பெண், கணவனுடைய மறைவுக்குப்பின் அவனுடைய முழுச் சொத்துக்கும் உரிமையாகின்றாள். அவனுடைய நிலங்கள், அடிமைகள், நகைகள், மற்றும் மதிப்பான பொருள்கள்,கால்நடைகள் முதலியன அவளுக்கே சொந்தமாகும் என்று சட்டம் நிறைவேற்றப்பட்டதாகக் கல்வெட்டு கூறுகின்றது. இது நம் தமிழ்நாட்டில் அன்று தொட்டு இன்று வரை நிலவும் ஒரு செய்தி ஆகும். ஆனால் ஒருவன் இறப்பதற்குமுன் அவன் குற்றம் செய்திருந்தால் அவனுடைய நிலங்கள் விற்கப்படும்; வாங்கியவனுக்கே நிலங்களும் அடிமைகளும் சொந்தமாகும் என்ற கல்வெட்டுச் செய்தி நமக்குப் புதியதாகும். குற்றம் செய்தவர்களுடைய சொத்துகள் விற்கப்பட்டு விடுகின்றன.

இக்கல்வெட்டால் சமுதாயத்தில் சொத்துகள் பராமரிக்கப்பட்டு வந்ததை அறிகின்றோம். பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட்டாலும் அது அவளுடைய கணவனின்

நன்னடத்தையின் அடிப்படையிலேயே இருந்ததைக் காண்கின்றோம். கணவன் நல்லவனாக விளங்கினால்தான் பெண்கள் சமுதாயத்தில் சிறப்புடன் விளங்க முடியும் என்பதை அறிகின்றோம்.

பிராமணர்களுக்கு விதிக்கப்பட்ட சட்டங்கள்

பிராமணர்கள் உயர்ந்த சமுதாயத்தினராகக் கருதப் பட்டனர். அரசர்கள் அவர்களுக்கு ஏராளமான நிலங்களைத் தானமாகக் கொடுத்தனர். பிராமணர்கள் அரசர்களுக்கு ஆலோசனைகள் வழங்குதல் போன்ற காரியங்களில் அதிக மாக ஈடுபட்டிருந்தனர், அவர்கள் எருதுகள் பூட்டி நிலத்தை உழுதல் கூடாது. கூலி வேலைகளில் ஈடுபட்டால் வேள், அரசு ஆகிய தகுதிகளுக்கு வர இயலாது.

தொல்காப்பியர் மரபியலில் அந்தணர்கள் வேள், அரசு ஆகிய பதவிகளுக்கு எப்போதும் வர இயலாது என்று கூறுகின்றார்.

"பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ மைப்பெயர்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே"

என்பது நூற்பா.[2] இதற்கு உரையாசிரியர்கள் இரண்டு வித மாகப் பொருள் கூறுகின்றனர். அரசு, வேள் முதலிய பதவிகள் அவர்களுக்கு உரியது என்று சிலர் கூறுகின்றனர். அவை அவர்களுக்கு உரித்தன்று என்று சிலர் கூறுகின்றனர். அந்தணர்கள் சில சமயங்களில் ஆட்சி செய்தாலும் வேள், அரசு முதலிய பதவிகள் அவர்களுக்கு உரியது அன்று என்பதே பொருத்தமாகும். தொல்காப்பியர்,

"அந்தணாளர் கரசு வரைவின்றே"

என்றும் நூற்பா[3] செய்திருப்பதால் இது தெளிவாகின்றது. அரசு என்பது அந்தணர்களுக்கு நிரந்தரமானதன்று என்பது தெளிவு.

### மற்ற சமூகத்தினருக்குப் போடப்பட்ட சட்டங்கள்

காவடிக்காரர்கள், குயவர்கள், உவச்சர்கள், கைக்கோளர்கள், நாவிதர்கள் போன்ற இனத்தவர்கள் அதிக முடி (தலை மயிர்) வைத்திருக்கக் கூடாது. இவர்கள் தங்கள் விழாக்களின்போதும் மகிழ்ச்சியான நாள்களின்போதும் பேரிகை போன்ற கருவிகளை அடிக்கக்கூடாது. இவர்கள் அடிமைகள் வைத்துக் கொள்ளக் கூடாது. யார் மீதும் அதிகாரம் செலுத்தக் கூடாது. சின்ன விளக்குகள், பாண்டங்கள் செய்கின்ற குயவர்கள் மேலாடை அணிந்து கொள்ளலாம். இதனால் மற்றவர்கள் மேலாடை அணிந்து கொள்வது தடை செய்யப்பட்டது போலும்.

### பிற சமுதாயச் சட்டங்கள்

எருதுகள் ஊருக்கும் ஒதுக்குப்புறத்தில் அதற்கெனக் கட்டப்பட்டிருக்கின்ற தொழுவத்திலதான் கட்டப்பட வேண்டும். மாட்டுத் தொழுவம் வீட்டுமனை போன்றவற்றை நெல் பயிரிடும் நிலங்களாக மாற்றக் கூடாது.

### சட்டம் போட்டதற்கான காரணங்கள்

கல்வெட்டில் சட்டம் போட்டதற்கான காரணம் கூறப்படவில்லை. ஒருவேளை பாண்டியர்களோடு தொடர்ந்து போரிட்டதால் ஏற்பட்ட விளைவாக இருக்கலாம். அப்போரினால் நாட்டில் அமைதியின்மையும் சட்ட ஒழுங்கின்மையும் ஏற்பட்டு, நாட்டில் சமுதாயச் சண்டைகளும் குழப்பங்களும் ஏற்பட்டிருக்கலாம். அதனால், இவ்வாறு பல சட்டங்களைப் போட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கலாம்.

இதே அரசனுடைய ஆரப்பாக்கம் கல்வெட்டு, திருவாலங்காட்டுச் செப்பேடு முதலியன அரசன் மேற்

கொண்ட நடவடிக்கைகளைப் பற்றிக் கூறுகின்றன.[4] சாதிக் கட்டுப்பாடுகள் மிக்கிருந்ததையும் அரசனுடைய இந்தச் சட்டத்தினால் மக்கள் ஓரளவு நிவாரணம் பெற்றதையும் இதனால் அறிகின்றோம்.[5]

முடிவுரை

இக்கல்வெட்டு பெண்களுக்குச் சமுதாயத்தில் இருந்த மதிப்பை நிலை நாட்டுகின்றது, கணவனால்தான் பெண்கள் உயர்வு பெற்றனர் என்பதை அறிகின்றோம். பிராமணர்கள் சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததை இக்கல்வெட்டால் அறிகின்றோம். மற்ற சமூகத்தினருக்கு விதிக்கப்பட்ட சட்டங்கள் போன்று பிராமணர்களுக்குக் கடுமையான சட்டங்கள் விதிக்கப்படாததை இக்கல்வெட்டு எடுத்துக் காட்டுகின்றது. சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் எப்போதும் இருந்து வந்திருக்கின்றன. இவை அழிந்தால்தான் எல்லோருக்கும் ஒரு நீதி ஒரு சட்டம் என்ற நிலை ஏற்படும்.

## குறிப்புகள்

1. A. R. E. 538 of 1918.
2. தொல்காப்பியம், மரபியல், நூற்பா—73.
3. தொல்காப்பியம், மரபியல், நூற்பா—82.
4. A. R. E. 1906, p. 70.
5. A. R. E. 1919, p. 98

# மதுக்கரைப் பட்டயம்

## மதுக்கரை

முன்னொரு காலத்தில் சேர, சோழ, பாண்டியர்கள் மதுக்கரையில் கூடி எல்லை பிரித்ததாகப் பல குறிப்புகள் கிடைக்கின்றன. கோவைக்கிழார் இராமச்சந்திரஞ் செட்டியார் இதனைக் 'கொங்கு நாட்டு வரலாறு' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். மதுக்கரை கொங்கு நாட்டின் கிழக்கு எல்லையாக விளங்கியது என்பதை,

"மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழநி மதிகுடக்குக்
கதித்துள வெள்ளி மலை பெரும்பாலை கவின்வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ் வளமுற்று
மேவினோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு
மண்டலமே"

என்ற 'கொங்கு மண்டல சதக'ப் பாடலால் அறிகின்றோம். இப்பட்டயம் மதுக்கரையில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப் பிடுகின்றது. மதுக்கரையில் கொங்கு இருபத்து நான்கு நாட்டுக் கவுண்டர்களும் கூடி, பாண்டிய நாட்டிலிருந்து குலாவர்களை அழைத்து வர முடிவு செய்கின்றனர். குலாவர்களுக்குச் சில உரிமைகளைக் கொடுக்கிறார்கள். அவர்களுக்குக் 'கொங்குத் திருநீலகண்டர்' என்ற பட்டமும் அளித்து சாசனம் செய்து கொடுக்கிறார்கள். அந்தப் பட்டயமே இதுவாகும்.

### பட்டயம் கிடைத்த வரலாறு

பட்டயத்தின் செப்புப் படிவம் கிடைக்கவில்லை. பழைய கோட்டைப் பட்டக்காரர்வசம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஓலைச் சுவடியில் எழுதப்பட்டுள்ள பிரதி கிடைத்துள்ளது. இதனைப் போற்றிப் பாதுகாத்து அளித்தவர் இராசிபுரத்துப் புலவர் கு. கந்தசாமி அவர்கள். இப்போது பொறியாளர் கொடுமுடி சண்முகன் அவர்களிடம் உள்ளது. இப்பட்டயத்தை 1974-இல் கொங்கு பதிப்பகத்தார் பதிப்பித்துள்ளார்கள்.

### பட்டயத்தின் எழுத்தமைப்பு

பட்டயத்தில் பேச்சுத் தமிழ் வடிவம்தான் அதிகமாகக் காணப்படுகின்றன. ஸ, ஜ, ஷ, க்ஷ போன்ற வடமொழி எழுத்துகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆண்டைக் குறிக்க ௵ என்ற சுருக்கெழுத்தையும், மாதத்தைக் குறிக்க மீ என்ற சுருக்கெழுத்தையும் பயன்படுத்தியுள்ளார்கள். பட்டயத்தில் ரா-றா என்றும் ழ-ள என்றும் பயன்படுத்தப்பட்டுள்ளன. 'ஓ' ஒலி 'உ' ஒலியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

(உ.ம்) கொடுத்து—குடுத்து

'இகர யகரம் இறுதி விரவும்'—(தொல் எழுத்து 58) என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கேற்ப கை-கயி என்று கையாளப்பட்டுள்ளது.

### சொல் எழுத்து முறை

தொல்காப்பியர்,

'கசதப முதலிய மொழிமேற் றோன்றும்
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ஙஞநம என்னும் ஒற்றா கும்மே
அன்னமரபின் மொழிவயி னான'
(தொல் எழுத்து. 143)

என்று உயிர்மயங்கியல், மெய்மயங்கியல் பற்றி இந் நூற்பாவிற் செய்துள்ளார். இந்தப் பட்டயத்தில் இந் நூற்பாவிற்கேற்ப பல சொல் வடிவங்கள் காணப் படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| மெல்லினம் | (க) | மெல்லினம் | (ங்க) |
| | (ச) | | (ஞ்ச) |
| | (த) | | (ந்த) |
| | (ப) | | (ம்ப) |

(உ-ம்) தென்ங்கரை
கல்லும்ங்கவேரியும்
முன்ம்பாக
பலன்ம் பெறுவாற்கள்

| | | | |
|---|---|---|---|
| இடையினம் | (க) | இடையினம் | (க்க) |
| | (ச) | | (ச்ச) |
| | (த) | | (ந்த) |
| | (ப) | | (ப்ப) |

(உ-ம்) கடல்க்கரை
வேள்க்கோபரி
கேள்க்க
வச்ச

ஒலிவடிவ மாறுபாடுகள்

பட்டயம் பேச்சுத் தமிழில் எழுதப்பட்டுள்ளது. ஒலி வடிவ மாறுபரடுகள் காணப்படுகின்றன.

1. த்த—ச்சு
பிரித்தது—பிரிச்சது
வைத்தது—வச்சது

2. ஒ—உ
கொடுத்து—குடுத்து
கொடுத்தோம்—குடுத்தோம்

3. செய்—செயி
   கைமேல்—கயிமேல்
   வைக்கவும்—வயிக்கவும்

4. ன்ற—ண்ண
   கன்று—கண்ணு
   ஒன்று—ஒண்ணு (ஒன்னு)

பிழைகள்

பட்டயம் பேச்சுத் தமிழில் எழுதப்பட்டிருப்பதால் பிழைகள் அதிகமாகக் காணப்படுகின்றன. தெரிந்தும், தெரியாமலும் சில பிழைகள் நேர்ந்துள்ளன.

தெரிந்து நேர்ந்த பிழைகள்

பிழை என்று தெரிந்தும் சில சொற்கள் எழுதப்பட்டுள்ளன. உதாரணமாக குடுத்து, குடுத்தோம் என்பன வற்றைச் சொல்லலாம்.

தெரியாமல் நேர்ந்த பிழைகள்

சில எழுத்துகளுக்கு உள்ள வேறுபாடு தெரியாமை யால் பல பிழைகள் நேர்ந்துள்ளன.

(உ-ம்) மார்கழி—மார்களி
எழுதினது—யெளுதினது
கிழக்கு—கிளக்கு
அழைத்து—அனைத்து
பிழைப்பு—பிளைப்பு
குழாய்—குளாய்
தொழிலாளி—தொளிலாளி
ராசா—றாசா
கர்த்தராகிய—கர்தறாகிய
சோழராசன்—சோளறாசன்

சேர ராசன்—சேற றாசன்
தெற்கு—தெர்கு

சில சமயங்களில் ர்ண—ர்ண்ண என்று மாறுவது உண்டு.

வர்ணம்—வர்ண்ணம்

பட்டயத்தில் வர்ண்ணம்—வற்ண்ணம் என்று எழுதப் பட்டுள்ளது.

## பட்டயச் செய்தி

கொங்கு இருபத்து நான்கு நாட்டுக் கவுண்டர்களும் மதுக்கரையில் கூடி, பாண்டிய நாட்டிலிருந்து அழைத்து வந்த குலாலர்களுக்குச் சில உரிமைகளும் கடமைகளும் வழங்குவது பற்றிப் பேசி, சாசனம் செய்து கொடுத்ததை இப்பட்டயம் கூறுகின்றது. 'கொள்வி கோடி யிறுவருக்கும் ஒன்னெ ஒன்னு, உங்குறது திங்குறதும் யிறுவருக்கும் ஒன்னு, கொள்குறது குடுக்கிறது பிறதியம்' என்று சொல்லி மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயில்முன் வலக்கை போட்டுக் கொடுக்கிறார்கள்.

## செய்தி அமைப்பு முறை

பட்டயம் தொடக்கம், செய்தி, முடிப்பு என்ற முறையில் அமைந்துள்ளது.

## தொடக்கம்

பட்டயம் 'சுபமஸ்து' என்ற மங்கலச் சொல்லுடன் தொடங்குகின்றது. பின்னர் கலியுக வருடம், சாலிவாகன சகாப்தம், மாதம், தேதி, திதி, நட்சத்திரம், யோகம், காரணம், லக்கினம் முதலியவை கூறப்பட்டுள்ளன.

## செய்தி

அரசர்களின் பரம்பரைகள் சொல்லப்பட்டுள்ளன, புராண இதிகாச செய்திகள் கூறப்பட்டுள்ளன. கொங்கு

நாட்டின் எல்லை குறிப்பிடப்பட்டுள்ளது. கொங்கு இருபத்து நான்கு நாட்டுப் பெயர்களும், கவுண்டர்களின் பெயர்களும் கூறப்பட்டுள்ளன. கவுண்டர்களும் வேட்கோவரும் செய்து கொண்ட ஒப்பந்தம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

## முடிப்பு

பட்டயத்தின் இறுதியில் பட்டயச் செய்தியைக் குறை கூறுபவர்கள் அடையும் தீமைகளும் நல்லது கூறுபவர்கள் பெறுகின்ற நன்மைகளும் கூறப்பட்டுள்ளன.

# மோரூர்க் காங்கேயர்

## முன்னுரை

மோரூர், சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டத்திலுள்ள ஒரு பழமையான ஊர் ஆகும். இவ்வூர் திருச்செங்கோட்டிற்கு வடமேற்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் காங்கேயர் என்னும் வேளாண் குடும்பத்தினர் பன்னெடுங் காலந்தொட்டே வசித்து வருகின்றனர். இக்குடும்பத்தினர் வீரம், கொடை, புகழ் ஆகிய முப்பண்புகளிலும் சிறந்து விளங்கினர். இவர்கள் வேளாண் மரபில் கன்ன குலத்தைச் சார்ந்தவர்கள். இம்மரபினர் செய்த தொண்டுகள் பற்பலவாகும். மோரூர்க் காங்கேயர் பற்றிய குறிப்புகள் கி.பி. 12 ஆம் நூற்றாண்டிலிருந்தே நமக்குக் கிடைக்கின்றன.

## சூரிய காங்கேயன்

மூன்றாம் குலோத்துங்கச் சோழன் (1178-1218) காலத்தில் வாணகோவரையன் என்பவன் சேலம் மாவட்டம் ஆறகழூரைத் தலை நகராகக் கொண்ட மகத நாட்டை ஆண்டு வந்தான். போர்த்திறமை மிக்க இவன் சோழனுக்குத் துணையாக இருந்தான். மூன்றாம் குலோத்துங்கனால் முறியடிக்கப்பட்ட முதலாம் சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் (1190-1218) கொங்குச் சோழனான வீர சோழனின் (1183-1206) உதவியை நாடிக் கொங்கு நாட்டில்

தங்கியிருந்தான். பாண்டியன் ஆறகழூர் வாணனைப் பிடித்து வரவேண்டும் என முடிவு செய்தான். மோரூர்ச் சூரியன் என்னும் கொங்குப் படைவீரன் அதைச் செய்து முடிப்பதாக முன்வந்து, சில வீரர்களுடன் மாறுவேடம் பூண்டு ஆறகழூரை அடைந்தான். அங்கு பல்லக்குத் தூக்கிகள் போல் இருந்து வாணனை மகத நாட்டை விட்டுக் கொண்டு வந்து, சங்ககிரிக் கோட்டையில் தங்கி இருந்த பாண்டியன் முன் நிறுத்தினான். பாண்டியன் மகிழ்ந்து அவனுக்கு ஆகவராம பாண்டியன், காங்கேயன் என்னும் பட்டப் பெயர்களோடு எழுகரை நாட்டு அதிகாரமும் கொடுத்துப் பெருமைப் படுத்தினான். இச்சூரியன் ஆகவராம பாண்டிய சூரிய காங்கேயன் என வழங்கலானான். இதிலிருந்து இம்மரபினர் காங்கேயன் என்னும் பெயரை மரபுப் பெயராகக் கொண்டனர்.[1]

### பொப்பண காங்கேயன்

சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் விசய மங்கலத்திற்கு அருகிலுள்ள நிரம்பை என்னும் ஊரைச் சார்ந்தவர். கி.பி. 14 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியினர். இவரை ஆதரித்தவன் பொப்பண காங்கேயன். இவன் மோரூர்க் காங்கேயர் மரபினன் ஆவான்.[2]

### காங்கேயன்

இவனுடைய இயற்பெயர் தெரியவில்லை. இவன் வெண்பாவில் உரிச்சொல் நிகண்டு என்னும் நூலை இயற்றியவன். இவனும் மோரூர்க் காங்கேயர் மரபினனே ஆவான்.[3]

### திருமலை காங்கேயன்

இவன் விசயநகர மன்னன் கிருஷ்ண தேவராயர் காலத்தில் எழுகரை நாட்டுப் பகுதிக்கு அதிகாரியாக இருந்தவன்.

திருச்செங்கோட்டிற்கு அருகிலுள்ள சித்தளந்தூரில் கிடைத்த கல்வெட்டில் இவன் குறிக்கப்பட்டுள்ளான். கல்வெட்டின் காலம் கி.பி. 1533 ஆகும். கல்வெட்டு இவன் தானத்தைக் குறிக்கின்றது.[4]

### திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயன்

இவன் திருமலை காங்கேயனுடைய மகன் ஆவான். அவன் திருச்செங்கோட்டில் மலைமேல் பல திருப்பணிகள் செய்துள்ளான். கி.பி. 1599 இல் அர்த்தநாரீசுவரர் சந்நதி, அடுத்த மண்டபம் முதலியவற்றைக் கட்டினான் என்று கல்வெட்டுக் கூறுகின்றது.[5] இவன் சங்ககிரி துர்க்கத்தைச் சார்ந்த இடையர் குலத்து எம்பெருமான் என்பவரைச் கொண்டு தக்கைராமாயணம் என்னும் நூலைப் பாடச் செய்வித்தான்.[6]

### அத்தப்ப இம்முடி நல்லதம்பிக் காங்கேயன்

இவன் திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயன் மகன் ஆவான். இவன் கி.பி. 1619 இல் திருச்செங்கோட்டு மலைமேல் வேலவர் மூலத்தானம், அர்த்தமண்டபம், அணியொட்டி மண்டபம் முதலியன செய்வித்தான் என்று கல்வெட்டுக் கூறுகின்றது.[7]

### குமாரசாமி காங்கேயன்

இவன் திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயனின் இரண்டாவது மகன் ஆவான். இதனைத் "திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயன் குமாரன் அத்தப்ப இம்முடி நல்லதம்பிக் காங்கேயன் தம்பி குமாரசாமி காங்கேயன் என்று இவன் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளதால் அறிகின்றோம். இவன் கி.பி. 1624 இல் திருச்செங் கோட்டில் மலை மேல் நாரி கணபதியார் மண்டபம்,

தாண்டவ மண்டபம் முதலியவற்றைக் கட்டினான் என்று கல்வெட்டுக் குறிக்கின்றது.[8]

கி.பி. 17 ஆம் நூற்றாண்டுப் பட்டயம் ஒன்று 60 கரண காங்கெயன் என்பவன் பற்றிக் குறிப்பிடுகின்றது.[9]

முடிவுரை

இது காறும் கண்டவற்றால் மோரூர்க் காங்கேயர் பற்றிய குறிப்புகள் நமக்கு கி.பி. 12 ஆம் நூற்றாண்டி லிருந்து கிடைத்தாலும் முழுமையாகக் கிடைக்கவில்லை என அறிகிறோம். இவர்களைப் பற்றிய முழுமையான குறிப்புகளைக் கண்டு பிடித்து வெளிக் கொணர்தல் இன்றியமையாததாகும்.

## குறிப்புகள்

1. புலவர் குழந்தை, கொங்கு நாடு, ப.ம். 177-178.
   கார்மேகக் கவிஞர், கொங்கு மண்டல சதகம், ப.ம். 59-60 (தி.அ. முத்துசாமிக் கோனார் உரை)
2. சிலப்பதிகாரம், உரைச் சிறப்புப் பாயிரம், பாடல் 3
3. கொங்கு மண்டல சதகம், ப.ம். 76
4. A. R. E. 138 of 1915.
5. A. R. E. 645 of 1905.
6. கொங்கு மண்டல சதகம், ப.ம். 76
7. A. R. E. 648 of 1905
8. A. R. E. 647 of 1905
9. தேவோலை, இதழ் 7, சனவரி 1976.

## துணை நூல்கள்

1. புலவர் குழந்தை, கொங்கு நாடு.
2. கார்மேகக் கவிஞர், கொங்கு மண்டல சதகம்.
3. ஆய்வுக் களஞ்சியம், திருச்செங்கோடு.

# பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள்

முன்னுரை

கொங்கு நாடு முற்காலத்தில் இருபத்து நான்கு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இந்த இருபத்து நான்கு நாடுகள் சில சமயங்களில் பல விதமாகப் பிரிக்கப்படும், உபநாடுகள் அமைக்கப்பட்டும், பின்பு சேர்க்கப்பட்டும் வந்தனவாகத் தெரிகின்றன. குன்றத்தூர்க் கூற்றம் (சங்ககிரித் துர்க்கம்) தாராபுரக் கூற்றம், தணாக்கன் கோட்டைக் கூற்றம் என்றும் பிரித்து விசயநகர ராயர் காலத்தும் மதுரை நாயக்கர் காலத்தும் ஆளப்பட்டு வந்திருப்பதாக அறிகின்றோம்.

கொங்கு இருபத்து நான்கு நாடுகள்

பூந்துறை நாடு தென்கரை நாடு, காங்கேய நாடு, பொன்கலூர் நாடு, ஆறைநாடு, வரக்க நாடு, திருவாவினன் குடிநாடு, (வையாபுரி நாடு), மண நாடு, தலைய நாடு, தட்டய நாடு, பூவாணிய நாடு, அரைய நாடு, ஒடுவங்க நாடு, வடகரை நாடு, கிழங்கு நாடு, நல்லுருக்க நாடு, வாழவந்தி நாடு, அண்ட நாடு, வெங்கால நாடு, சாவடிக்க நாடு, ஆனை மலை நாடு, இராசிபுர நாடு, காஞ்சிக் கோயில்

நாடு, குறுப்பு நாடு ஆகிய இருபத்து நான்கு நாடுகளும் கொங்கு இருபத்து நான்கு நாடுகளாகும்.

### ஏழுகரை நாடு

காவிரி, பவானி, திருமணிமுத்தாறு, அழகுமுரிச்சான், கொப்பைய யாறு, அமராவதி, நொய்யல் ஆகிய ஏழு ஆறுகளும் பாய்கின்ற நாடு ஏழு கரை நாடு என்று அழைக்கப் பட்டது.[1] ஏழுகரை நாட்டில் பன்னிரண்டு நாடுகள் அடங்கி யிருந்ததாகத் தெரிகின்றது. ஏழுகரை நாடுகள் அடங்கிய பகுதி 'குன்றத்தூர்க் கூற்றம்' என்று அழைக்கப்பட்டது என்பதைக் கிருஷ்ணதேவராயர் கல்வெட்டுகள் 'கொங்கில் வீரசோழ மண்டலத்துக் குன்றத்தூர் துர்க்கத்தைச் சூழ்ந்த பன்னிரண்டு பற்று'[2] என்றும் 'முள்வாய் சூழ்ந்த குன்றத்தூர்ச் சீர்மை ஏழுகரை நாட்டுக்குள்ளான கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு'[3] என்றும் குறிப்பதால் அறியலாம்.

### பன்னிரண்டு நாடுகள்

குன்றத்தூர்க் கூற்றத்தில் பன்னிரண்டு நாடுகள் இருந்ததாகத் தெரிகின்றது.[4] மேல்கரைப் பூந்துறை நாடு, கீழ்க்கரைப் பூந்துறை நாடு, பருத்திப்பள்ளி நாடு, ஏழூர் நாடு, நங்கை வல்லி நாடு (வஞ்சி நாடு), பக்க நாடு, (வெல்லாறு நாடு), பெரும்பாலை நாடு, மேல் கரை நாடு, அரைய நாடு, வரழவந்தி நாடு, விமலை நாடு, தூசியூர் நாடு ஆகியபன்னிரண்டு நாடுகளும் ஏழுகரை நாடுகளாக இருக்க லாம். ஏனெனில் இந்தப் பகுதியில்தான் மேற்கூறிய ஏழு ஆறுகளும் பாய்கின்றன.

### பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள்

மேற் கூறிய பன்னிரண்டு நாட்டு உறுப்பினர்களும் அடங்கிய குழுவே கல்வெட்டுகளில் 'பன்னிரண்டு நாட்டுப்

பெருமக்கள்' என்று குறிக்கப்பட்டுள்ளது. குன்றத்தூர்க் கூற்றத்தின் தேவநகரம் திருச்செங்கோடு ஆகும். ஆதித்த சோழனுடைய திருச்செங்கோட்டுக் கல்வெட்டுகள் 'திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள்' என்று குறிக்கின்றன.

பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள் கோயில் நிர்வாகத்தில் பெரும் பங்கு வகித்ததைக் கல்வெட்டுகள் பறை சாற்றுகின்றன. இப்பெருமக்களிடம் இளங்கோவடிகள் தேவியார் மூரிகாமக்கனாரர் என்பவர் இருபது கழஞ்சு பொன் கொடுத்து ஏகாதசி நாளில் இருபது பிராமணர்களுக்கு உணவளிக்கப் பணித்ததைத் திருச்செங்கோட்டில் கிடைத்த ஆதித்த சோழனுடைய 13–ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது.[5] மூரி அமுதனார், திருச்செங்கோட்டு ஆழ்வாரக்கு நந்தா விளக்கு எரிக்கப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்களிடம் பதினைந்து கழஞ்சு பொன் கொடுத்ததை ஆதித்தனுடைய 14ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு கூறுகின்றது.[6] இளங்கோன் மனைவி மூரி அமுதனார் ஏகாதசி நாளில் பிராமணர்களுக்கு உணவளிக்கப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்களிடம் பொன் கொடுத்ததை ஆதித்தனுடைய 14ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு கூறுகின்றது.[7] ஒருவர் கொடுத்த பொன்னினால் கிடைக்கின்ற வட்டியைக் கொண்டே பன்னிரண்டு நாட்டுக் பெருமக்கள் திருச்செங்கோட்டு ஆள்வார்க்கு நந்தா விளக்கும் பிராமணர்களுக்கு உணவும் அளித்தனர் என்பதைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம்.

முடிவுரை

'பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள்' என்பது பன்னிரண்டு நாட்டு உறுப்பினர்கள் அடங்கிய ஒரு குழு என்று கொள்ளலாம், இவர்கள் கோயில் காரியங்களில் பெரும் பங்கு வகித்தனர் என்பதைத் திருச்செங்கோட்டில் ஆதித்த சோழனுடைய கல்வெட்டுகளால் அறிகிறோம்.

## குறிப்புகள்

1. ஆய்வுக் களஞ்சியம், திருச்செங்கோடு—2, பக். 41.
2. ஆய்வுக் களஞ்சியம், திருச்செங்கோடு. கல்வெட்டு எண். 18.
3. Ibid. கல்வெட்டு எண் 19.
4. கொங்குமண்டல ஊர்த்தொகை, ப.ம். 3.
5. S.I.I. vol. XIII, No. 232.
6. Ibid, No. 242.

# நிலக் குத்தகை-வரிக் குறைப்பு

முற்காலத்தில் நமது நாட்டிலிருந்த விளைநிலத்தின் பெரும்பகுதி கோயில்களுக்கும், வசதிபடைத்த ஒரு சிலருக்கும் உரிமையாக இருந்திருக்கின்றது. நிலமற்ற விவசாயிகள் அந்நிலத்தைக் குத்தகைக்குப் பெற்று உழுதிருக்கின்றார்கள். நிலத்தில் கிடைத்த விளைச்சலைப் பங்கிட்டுக் கொடுத்திருக்கின்றார்கள். இம்முறையினை 'வரிசைப்பற்று' என்றும், 'வாரப்பற்று' என்றும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[1] குத்தகை சரியாகக் கொடுக்கப் படாத காலத்தில் அரசன் தலையிட்டு, புது குத்தகை தாரர்களை நியமிக்க அனுமதி அளித்திருக்கின்றான்.[2]

பண்டைக் காலந்தொட்டே அரசு விவசாயிகளிடம் கண்ணும் கருத்துமாக இருந்து வந்திருக்கின்றது. 'உழுவார் உலகத்தார்க்காணி' என்பதை அரசர்கள் நன்குணர்ந்து செயல் பட்டிருக்கின்றார்கள். வரிக் கொடுமை தாங்க முடியாமல் விவசாயிகள் போராடியதைக் கல்வெட்டுகளில் பார்த்திருக் கிறோம்.[3] ஆனால் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த இரண்டாம் இராசாதிராசனின் 14-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுகள் இரண்டு நிலவரிக்குறைப்புப் பற்றி யும் குறிப்பிட்டுள்ளதை அறியும்போது நமக்கு வியப்புத் தோன்றுகின்றது.

தஞ்சை மாட்டம் சீர்காழி வட்டம் திருக்கருகாவூர் வேல்விடை நாதர் கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டு திருவாலி என்கின்ற எதிரிலிச் சோழ சதுர்வேதி மங்கலத்தி லுள்ள சபையோர் கோயில் நிலத்தைப் பயிரிடுபவர் களுக்குக் குத்தகையைக் குறைத்துக் கொடுக்க உத்தரவு இட்டதைக் குறிப்பிடுகின்றது.[4] அச்சாபுரத்தில் கிடைத்த ஒரு கல்வெட்டு பஞ்சவன் மகாதேவி என்கின்ற குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்திலுள்ள சபையோர் அச்சாபுரத்தைச் சேர்ந்த பிற்பட்ட நல்லூர், அழகநல்லூர் ஆகிய ஊர்களிலுள்ள விவசாயிகள் செலுத்த வேண்டிய வாரம், கடமை ஆகியவற்றின் குறைப்புப்பற்றி விடுத்த உத்தரவைக் குறிப்பிடுகின்றது.[5]

குத்தகைக் குறைப்பு விவரம்

| முன்பு செலுத்தி வந்த குத்தகை (கலங்கள்) | நடப்பு ஆண்டிலிருந்து செலுத்த வேண்டிய குத்தகை (கலங்கள்) | குத்தகைக் குறைப்பு (கலங்கள்) |
|---|---|---|
| 80 | 75 | 5 |
| 75 | 65 | 10 |
| 70 | 60 | 10 |
| 60-45 | 55-35 | 5 |
| 40-30 | 35-25 | 5 |
| 25 | 21-50 | 3-50 |
| 20 | 18 | 2 |

வரிசைப்பற்று அல்லது வாரப் பற்று என்பதில் வராத, ஆனால் வெள்ளான்பற்று, தேவதானம், புறப்பற்று ஆகிய வற்றில் பயிர் செய்கின்ற விவசாயிகள் 2/5 பங்கை எடுத்துக் கொள்ளலாம். குடிப்பற்றில்பயிர் செய்கின்றவர்கள் தங்கள் உற்பத்தியில் 3 பங்கை எடுத்துக் கொள்ளலாம். தண்ணீர் பாய்ச்சி விளைவிப்பதில் பாதியை (செவ்வாரம்' என்று கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது) எடுத்துக் கொண்டு

பாதியை நிலச் சொந்தக்காரருக்குக் கொடுத்துவிட வேண்டும். பயிறு வகைகள் பயிரிடுகின்றவர்கள் எப்போதும் கொடுப்பது போலவே கொடுக்கவேண்டும். பச்சைப் பயிறு, எள் முதலியன பயிரிட்டால் விவசாயி பாதியை (செவ் வாரத்தை) எடுத்துக் கொள்ளலாம், கார்காலத்தில் நெல் அளப்பதற்கான கூலியை விவசாயியே ஏற்றுக் கொள்ள வேண்டும். காரி, பாசான் ஆகிய பருவத்தில் குண்டிக்கைக் குத் (kundigai) தேவைப்படுகின்ற பணத்தை நெல் விற்பதில் எடுத்துக் கொள்ளலாம்.

## வரிக்குறைப்பு

உலர் தானியங்கள் பயிரிடுபவர்கள் முன்பு செலுத்தி வந்த 20 காசுகளுக்குப் பதிலாக இனிமேல் 17 காசுகள் மட்டும் செலுத்தினால் போதும். 18–10 காசுகள் செலுத்தி வந்தவர்களுக்குக் குறைப்பு 2 காசுகள். 10-5 காசுகள் செலுத்தி வந்தவர்களுக்குக் குறைப்பு 2 காசுகள். வரி வசூலிக்கும் அதிகாரிகள் குடியிருப்பு வீட்டிற்குள் செல்லவோ, அபராதம் விதிக்கவோ கூடாது. ஒரு விவசாயியை, மற்றொரு விவசாயி செலுத்த வேண்டிய வரிக்காகச் சட்டக் கட்டுப்பாட்டிற்குள் உட்படுத்தக் கூடாது. மேற்கூறிய வாரத்திற்கும் கடமைக்கும் ஒத்துக் கொள்ளாத விவசாயியை நீக்கிவிட்டு வேறு ஒருவரை, மேற்கூறியவற்றை ஒத்துக்கொள்கின்றவரைப் போட லாம்.

கல்வெட்டில் வாரம், கடமை ஆகியவற்றின் குறைப் புக்குக் காரணம் குறிப்பிடப்படவில்லை. ஒரு வேளை பாண்டியர்களுடன் தொடர்ந்து போரிட்டதன் காரணமாக இருக்கலாம். இதே அரசனுடைய ஆரப்பாக்கம் கல்வெட்டு, திருவாலங்காட்டுச் செப்பேடு முதலியன மேற்கூறிய காரணத்திற்கு அரணாக அமைகின்றன.[4]

## அடிக் குறிப்புகள்

1. A.R.E. Nos. 429 and 538 of 1918
2. தஞ்சை. திருமாணம் ஊர்க் கல்வெட்டு, திரு. நடன காசிநாதன் 'தொல்லியல் கட்டுரைகள்', பக். 72.
3. மே.து. ராசகுமார் 'The Hindu' dated February. 25, 1978.
4. A.R.E. 429 of 1918.
5. A.R.E. 528 of 1918
6. A.R.E. 1919 Report, p 98.

# கல்வெட்டில் நீதி

## முன்னுரை

குற்றவியலில் இன்று பல பிரிவுகள் காணப்படுகின்றன. இன்ன குற்றத்திற்கு இன்ன தண்டனைதான் வழங்கப்பட வேண்டும் என்று வரையறை செய்யப்பட்டுள்ளன. கல்வெட்டுகளிலும் குற்றம் செய்தவர்களுக்குத் தண்டனைகள் வழங்கப்பட்டதைக் காண்கின்றோம். கோயில்களுக்குப் பசுக்கள், ஆடுகள் வழங்குதல், நந்தா விளக்கு எரித்தல் போன்ற தண்டனைகளே அதிகமாக விதிக்கப்பட்டிருந்ததைக் கல்வெட்டுகளினால் அறிகின்றோம். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் நீதி வழங்கப்பட்டதைப் பற்றி மூன்றாம் குலோத்துங்கனுடைய ஐந்து கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. தண்டனைகள் பெரும்பாலும் ஊர்ச் சபையினராலும் கோயில் நிர்வாகிகளாலும் ஆராயப்பட்டே வழங்கப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம்,

## மூன்றாம் குலோத்துங்கன்

இந்த அரசனுடைய ஐந்து கல்வெட்டுகள் நீதி வழங்கியதைப் பற்றிக் கூறுகின்றன. தெரியாமல் நடந்துவிட்ட கொலைக் குற்றங்களுக்கும் கோயில்களுக்கு விளக்கு வைக்கும் தண்டனையே வழங்கப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம்,

11வது ஆட்சி ஆண்டு கல்வெட்டு

இருவர் வேட்டையாடச் செல்கின்றனர், ஒருவர் விட்ட அம்பு தவறுதலாக மற்றவர் மீதுபட, அதனால் அவர் இறந்துவிடுகிறார். பல மாவட்டத் தலைவர்கள் கூடி, இது வேண்டுமென்றே செய்யப்பட்ட கொலை அன்று; தவறுதலாக நடந்து விட்டது என முடிவு செய்து அம்பு எய்தவர் கோயிலுக்குப் பல பசுக்களைக் கொடுத்து நெந்தா விளக்கு எரிக்குமாறு பணிக்கப்படுகின்றார்.[1]

13 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு

ஒருவருடைய எருமை அருகிலுள்ள மற்ற இருவர்களுடைய நிலத்தில் புகுந்து பயிர்களை நாசம் செய்து விடுகின்றது. அதனால் கோபம் அடைந்த அவர்கள் அவனை அடிக்க அவன் இறந்து விடுகிறான். ஊரவர்கள் கூடி அவர்கள் இருவரும் கோயிலுக்கு 48 ஆடுகளைக் கொடுத்து விளக்கு வைக்குமாறு கூறுகின்றனர்.[2]

16 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு

வேட்டையாடச் சென்ற பொழுது ஒருவர் எய்த அம்பு தவறுதலாக மற்றொருவர் மீது பட்டுவிடுகின்றது. சில நாள்கள் படுக்கையில் இருந்த பிறகு அவர் இறந்து விடுகின்றார். ஊர்ச் சபையினரும் பிராமணர்களும் கூடி, இது வேண்டுமென்றே செய்யப்பட்ட கொலை அன்று என முடிவு செய்து அம்பு எய்தவர் 12 ஆடுகளைக் கொடுத்துக் கோயிலுக்கு விளக்கு எரிக்குமாறு கட்டளையிடுகின்றனர்.[3]

38 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு

இருவர் வேட்டையாட குதிரையின் மீது சென்றனர். மான் ஒன்று இருவருக்கும் இடையில் ஓட ஒருவர் அம்பு எய்கின்றார். அம்பு மான் மீது படாமல் தவறுதலாக

மற்றொருவர் மீது பட்டு விடுகின்றது. அதனால் அவர் இறந்து விடுகின்றார். பெரிய நாட்டார் இதனை ஆலோசித்து அம்பு எய்தவர் கோயிலுக்கு ஒரு ஆடு கொடுத்து ½ விளக்கு வைக்கும்படி நீதி வழங்குகின்றனர்.[4]

43 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு

ஒருவர் மான் மீது அம்பு எய்ய, அது தவறுதலாக மற்றொருவர் பீது பட்டு விடுகின்றது. நாட்டார் கூடி இதனை ஆலோசித்து அம்பு எய்தவர் 48 ஆடுகள் கொடுத்துக் கோயிலுக்கு ½ விளக்கு வைக்கும்படி பணிக்கப்படுகிறார்.[5]

முடிவுரை

மேலே கண்ட கல்வெட்டுகளை நோக்கும்பொழுது கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் தற்செயலாகத் தவறுதலாக ஏற்பட்ட கொலைகளுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்படவில்லை என அறிகின்றோம். குற்றங்களுக்குப் பெரும்பாலும் கோயில்களுக்கு விளக்கு எரிக்கும் தண்டனைகளே விதிக்கப்பட்டதை அறிகின்றோம்.

## குறிப்புகள்

1. ARE 166 of 1919
2. ARE 110 of 1919
3. ARE 33 of 1919
4. ARE 279 of 1919
5. ARE 273 of 1919

# கல்வெட்டுகளில் வரிகள்

## முன்னுரை

ஒரு நாட்டில் அரசாட்சி செம்மையாக நடைபெறுவதற்கும், மக்கள் மேம்பாட்டிற்கான திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் வருவாய் மிகவும் இன்றியமையாததாகும். வருவாயைப் பெருக்குவதற்கு அரசு பலவகையான திட்டங்களைச் செயல்படுத்திக் கொண்டே இருக்க வேண்டும். அப்போதுதான் அரசு நன்கு நடைபெற முடியும்.

## வருவாய்க்கான வழிகள்

அரசுக்கு வருவாய் பெரும்பாலும் வரிகளினாலேயே கிடைக்கின்றது. அரசு பல்வேறு வகைகளான வரிகள் மூலம் வருவாய் ஈட்டியதற்கு நமக்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கின்றன. வரிகள் காசுகளாகவும் பொருள்களாகவும் பெறப்பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. கோயில்களிலிருந்தும் அரசுக்கு வருவாய் கிடைத்ததைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். கோயில்களே அரசின் கருவூலங்களாக விளங்கின. கோயில்களுக்குச் சொந்தமான நிலங்களும் இருந்தன. அவற்றின் மூலமும் அரசுக்கு வருவாய் கிடைத்தது.

## வரிகள்

கொங்கு நாட்டில் பலவகையான வரிகள் விதிக்கப்பட்டிருந்தன என்பதைக் கல்வெட்டுகளால் அறிகின்

றோம். நிலவரிகள், தொழில் வரிகள், சடங்கு வரிகள் போன்றவை கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. வரி கல்வெட்டில் இறை, ஆயம், பாட்டம், காணம் எனப் பல சொற்களில் குறிக்கப்பட்டுள்ளது. வரிகள் பெரும்பாலும் ஊர்ச் சபையினரையும் நாட்டாரையும் கலந்து ஆலோசித்த பிறகே விதிக்கப்பட்டதாக அறிகின்றோம்.[1] வரிகளை அரசு வசூலிப்பதில்லை. ஊர்ச்சபையினரும் நாட்டாரும் வரிகளை வசூலித்துத் தங்கள் ஊருக்கும் நாட்டிற்கும் ஆக்கப்பணிகளுக்குச் செலவு செய்தனர். ஊர்ச்சபை யினர், 'ஊரவரோம்' என்றும் நாட்டார் 'நாட்டவரோம்' என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றனர். கோவை மாவட்டம் பேரூர் கோஸ்டீசுவரர் கோயில் மண்டபத்தின் வடக்குச் சுவரில் உள்ள ஸ்ரீவிட வல்லாளதேவர் ஸ்ரீவீரமாதவ தண்டநாயக்கர் குமாரன் வீரசிக்க நாயக்கரின் கி. பி 1323-ஆம் ஆண்டு கல்வெட்டு இதனைத் தெளிவு படுத்து கின்றது.[2] பதின்மூன்று ஊரவர்கள் சர்வமானியமாக உதகம் பண்ணிக்கொடுத்ததை இக்கல்வெட்டுக் குறிப்பிடு கின்றது. இவ்வூர்களுக்கு, தெண்டம், கடமை, குடிமைத் வினியோகம் முதலியவற்றால் வருபனவற்றை 'நாங்களே எங்கள் நாட்டில் வைத்திறுத்துப் போதுவோமாகவும்' என்று எழுகரை நாட்டோரும் வெட்டிக் கொடுத் துள்ளனர்.

### நிலவரிகள்

நிலவரிகள் மூலமே அரசுக்குப் பெரிதும் வருவாய் கிடைக்கின்றது. முதலாம் இராசராசன் காலத்தில் அவன் ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதிகள் அனைத்தும் அளக்கப் பட்டதாகக் கல்வெட்டுகளினால் அறிகின்றோம். நிலவரி கள் நிலத்தின் தன்மைக்கு ஏற்பவே விதிக்கப்பட்டன. நில வரிகள் பணமாகவும், நெல் போன்ற பொருள்களாகவும் பெறப்பட்டன. கல்வெட்டுகளில் நிலவரி 'புரவு' என்றே

பெரும்பாலும் குறிக்கப்பட்டுள்ளது.[3] மற்றும் இத்தாயம்[4] (நிலத்தின் தன்மைக்கேற்ப விதிக்கப்பட்டவரி), நெல் முதல் (வரிக்காக இறுக்கப் பெறும் நெல்), நெல்லாயம், நெற் கடமை போன்ற வரிகளும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளன.

## தொழில் வரிகள்

பல்வேறு வகையான தொழில்களுக்கும் வரிகள் விதிக்கப்பட்டிருந்ததைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. ஏர் உழும் விவசாயிகள் செலுத்திய வரி 'ஏர்க்கடமை'. நிலத் திற்கு நீர் பாய்ச்சுவதற்குச் செலுத்தும் வரி 'தண்ணீர்க் காணம்.'[5] மீன் பிடிப்போர் செலுத்திய வரி 'பாசிப் பாட்டம்' ஆகும்.[6] உப்பின் மீது விதிக்கப்பட்ட வரி 'உப்பாயம்'[7] எண்ணெய் வியாபாரத்தின் மீது 'எண்ணெய்' என்னும் வரி விதிக்கப்பட்டதாக அறிகின்றோம்.[8] எண் ணெய் வியாபாரிகள் 'எண்ணெய்க்காணம்' என்னும் வரியையும் செலுத்தினர்.[9] இவர்கள் எண்ணெய் ஆட்டும் செக்கிற்காகச் 'செக்கிறை' என்ற வரியையும் செலுத்தி யுள்ளனர்.[10] கள் இறக்குவோர் செலுத்திய வரி 'ஈழம் பூட்சி' ஆகும்.[11] மரமேறிகள் ஏணிக்காகச் செலுத்திய வரி 'ஏணிக்காணம்' ஆகும். பொன் வேலை செய்கின்ற பொற்கொல்லர்கள் செலுத்திய வரி 'தட்டாரப்பாட்டம்' என்று கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.[12] நெய் வியாபாரிகள் 'நெய்' என்னும் வரியைச் செலுத்தியுள்ள னர்.[13] வண்ணான் துணி துவைக்கச் செலுத்திய வரி 'பாறைக்காணம்' ஆகும், இது 'வண்ணான் பாறை' என்றும் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. குயவர்கள் தாங்கள் செய்யும் பானைகளுக்காகக் 'குசக்காணம்' என் னும் வரியைச் செலுத்தியதாக அறிகின்றோம். இவ்வரி 'திரிகை ஆயம்' என்றும் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள் ளது. துணி நெய்வோர் செலுத்திய வரி 'தறி இறை' எனக் குறிக்கப்பெற்றுள்ளது.[14]

### சடங்கு வரிகள்

திருமணம், சாவு போன்ற சடங்குகளுக்கும் வரிகள் விதிக்கப்பட்டதைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். திருமணம் போன்ற மகிழ்ச்சிகரமான காரியங்களுக்குச் செலுத்திய வரி 'உகவை' ஆகும்.[15] இவ்வரி 'கண்ணாலக் காணம்' என்றும் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.[16] சாவுக்கு வசூலிக்கப்பட்ட வரி 'எலவை' ஆகும்.[17] இவ்வரி 'ஏல்வை' என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளது.

### குடிமக்கள் வரி

ஒவ்வொரு ஊரிலும் வாழும் மக்கள் தாங்கள் குடியிருப்பதற்காக வரி செலுத்தி வந்ததாகக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். இவ்வரி 'குடிமை,'[18] 'குடிப்பணம்'[19], 'நத்தவரி'[20] என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### கோயில் வரிகள்

கோயில்களிலிருந்து அரசுக்கு ஏராளமான வருமானம் கிடைத்தது. கோயில்களிலிருந்து 'கழஞ்சு' என்ற பொன்னும் பலவகையான காசுகளும் வரியாகக் கிடைத்தன.

நெல், கம்பு போன்ற தானியவகைகளும் வருவாயாகக் கிடைத்தன. கோயில் நிர்வாகத்தை ஊரவரோம் என்ற ஊர்ச்சபையினரும், நாட்டவரோம் என்ற நாட்டாரும் கவனித்து வந்தனர்.

### கால்நடைப் பராமரிப்பு வரிகள்

கிராமத்தில் சில உயர்ந்த கால்நடைகளைக் காட்சிப் பொருளாகப் பயன்படுத்தி வந்ததைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். அவற்றைப் பராமரிப்பதற்கு ஏற்படுகின்ற

செலவுகளுக்காகச் சில வரிகள் விதிக்கப்பட்டதை அறி கின்றோம்.

காட்சிக்காக வைக்கப்பெற்றுள்ள கிடா, பசு, எருது, எருமை ஆகியவற்றின் பராமரிப்புக்கான வரிகள் 'நற்கிடா' 'நல்பசு', 'நல்லெருது,' 'நல்லெருமை' என்று கல்வெட்டு களில் குறிக்கப்பெற்றுள்ளன.[21] இவை பொலியாகவும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். எனவே இவற்றைப் பராமரிக்க வரிகள் விதிக்கப்பட்டிருக்கலாம்.

நற்கிடா, நற்பசு, நெல்லெருது, நல்லெருமை போன்ற வரிகள் அரசின் உயர் அதிகாரிகளின் பயணச் செலவுக்காக வசூலிக்கப்பட்டவை என்று டாக்டர் டி. வி. மகாலிங்கம் தம் நூலில் கூறியுள்ளார்.[22] தென்னிந்தியக் கோயிற் சாச னங்கள் என்ற நூலில் இவ்வரிகள் அவற்றின் பராமரிப்புச் செலவுக்காக விதிக்கப்பட்ட வரிகள் என்று கூறப்பட் டுள்ளது.[23] இக்கருத்தே பொருத்தமானதாகும்.

## பொதுவரிகள்

மேற்கூறிய வரிகளன்றி எல்லாச் சமுதாயத்தினருக்கும் பொதுவான சில வரிகள் விதிக்கப்பட்டன. குற்றம் செய்தவர்களிடமிருந்து 'தண்டம்' என்னும் வரிவசூலிக்கப் பட்டது.[24] நியாய விசாரணை சபைக்குக் கொடுக்க வேண்டிய வரி 'மன்றுபாடு' ஆகும்.[25] ஊர்ச்சபை, நாட்டவர் போன்ற அமைப்புகளுக்குக் கொடுக்க வேண்டிய வரி 'அந்தராயம்' என்றழைக்கப்பட்டது.[26] அதிகாரி களுக்கு வழங்கும் காணிக்கைகள் 'அதிகாரப்பேறு' எனப் பட்டது.[27] ஊர்ச் சபையினருக்குச் செலுத்த வேண்டிய வரி 'ஊர்க்கடமை' ஆகும்.[28] மேற்பார்வை, கணக்குப் பரிசோதனை ஆகியவற்றைச் செய்யும் அதிகாரி களுக்குக் கொடுக்க வேண்டியது 'ஆராய்ச்சி' என்று வழங்கப்பட்டது.[29] ஓலை எழுதும் அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டது 'ஓலைச் சம்பளம்' ஆகும்.[30] கணக்கருக்கு நெல்லாகக் கொடுக்கப்பட்டது 'கணக்கப்

பேறு' என்று வழங்கப்பட்டது. இராம மத்தியஸ்தன், பத்திரம் எழுதுவோர் ஆகியவர்களுக்கு வழங்க வசூலிக்கப் பட்டது 'சந்திவிக்கரப்பேறு' எனப்பட்டது.[31] பொது மராமத்து வேலைகளைக் கூலியில்லாமல் செய்யும் ஆள் களுக்காக வசூலிக்கப்பட்ட வரி 'வெட்டிப்பேறு' ஆகும். இது கல்வெட்டுகளில் 'வெட்டிவேகாரி' என்றும் குறிக்கப் பெற்றுள்ளது.[32]

அதிகாரிகள்

வரி வசூலிக்கும் முழுப்பொறுப்பும் ஊரவரோம் என்றழைக்கப்பட்ட ஊர்ச்சபையினரிடமும், நாட்ட வரோம் என்றழைக்கப்பட்ட நாட்டாரிடமும் விடப்பட்ட தாகக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். அவர்கள் வரி களை வசூலித்துப் பொதுக்காரியங்களுக்குப் பயன் படுத்தினர். அரசும் அவர்களுக்கு முழு அதிகாரம் வழங்கி யிருந்ததைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

முடிவுரை

கல்வெட்டுகள் பல்வேறு வகையான வரிகளைக் குறிப்பிடுகின்றன. வரிகள் எவ்வளவு வசூலிக்கப்பட்டன, எத்தகைய முறைகள் பின்பற்றப்பட்டன போன்ற விபரங் களை அறிய முடியவில்லை. பல ஆக்கப்பணிகளை நிறை வேற்றுவதற்கு வரிகள் வசூலிக்கப்படுவது அவசியமா கின்றது, ஊர்ச்சபையினரும் நாட்டாரும் அதனை நன்கு செய்து வந்தனர். ஊராட்சி முறை (கிராமப் பஞ்சாயத்து ஆட்சிமுறை) சிறப்புற்றிருந்ததைக் கல்வெட்டுகள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

## குறிப்புகள்

1. Dr. M. Arokiasamy, 'The kongu country',p. 228
2. S. I. I. Vol. 5, 548 of 1893.

3. S. I. I. Vol. 1, 443 of 1925
   305 of 1908
   274 of 1920
4. Ibid
5. 588 of 1905
6. 235 of 1925
7. 583 of 1905
   305 of 1908
   313 of 1908
8. 305 of 1908
9. 313 of 1908
10. Ibid
11. 588 of 1905
12. Ibid
13. 305 of 1908
    313 of 1908
    246 of 1920
14. 588 of 1905
    313 of 1908
    255 of 1925
15. 588 of 1905
    313 of 1908, 305 of 1908
    274 of 1920
    443 of 1925
16. A. R. E. 186 of 1927
17. 556 of 1893
    588 of 1905
    305 of 1908
    313 of 1908
    274 of 1920
    443 of 1925

18. 548 of 1893
19. 305 of 1908
20. 255 of 1925
21. 246 of 1920
22. Dr. T. V. Mahalingam. 'South Indian Polity,' p. 166
23. தென்னிந்திய கோயிற் சாசனங்கள், பாகம்-3, பகுதி-2, ப.ம். 1452
24. 548 of 1893
    305 of 1908
25. 443 of 1925
26. 313 of 1908
27. 556 of 1893
28. 558 of 1905
    255 of 1925
29. 305 of 1908
    313 of 1908
30. 313 of 1908
31. Ibid
32. 246 of 1920

# கல்வெட்டுகளில் சிறப்புரிமை

## முன்னுரை

தமிழகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பெரும்பாலான கல்வெட்டுகள் கோயில்களிலேயே காணப்படுகின்றன. கோயில்களே ஊர்ப் பொதுவிடமாகவும், பொதுமக்கள் கூடுமிடமாகவும் விளங்கின. கோயில்களில் காணப்படுகின்ற பெரும்பாலான கல்வெட்டுகள் கோயில்களுக்கு அளிக்கப் பெற்ற கொடைகள், அங்கு நடைபெற்ற பூசைகள், பணி புரிந்தவர்கள் போன்ற செய்திகள் பற்றிக் குறிப்பிடு கின்றன.

## கோயிற் பணியாளர்கள்

கோயில்களில் பல்வேறு வகையான பணியாளர்கள் பணிபுரிந்ததைக் கல்வெட்டுகளால் அறியமுடிகின்றது. பூசைக்கு வேண்டிய பூக்களைப் பறித்துத் தொடுப்பவர் (திருப்பள்ளித் தாமம் பறிச்சு தொடுப்பவர்), பறை கொட்டுபவர்கள் (உவச்சர்கள்), கொம்பு ஊதுபவர்கள், கைமணி அடிப்போர், சுண்ணம் அடிப்பார், கோயில் வளாகத்தைச் சுத்தம் செய்யும் பெண்டிர் (திருமெழுகிடும் பெண்டிர்), கோயிற் காவலர் (திருமெய்க் காப்பாளன்), பூசை செய்வோர் (திருவாராதனை செய்வோர்), திருப் பதிகம் பாடுவோர் (தேவாரம், திருப்பதியம் விண்ணப்பம் செய்வார்) கம்மாளர் போன்ற பணியாளர்கள் பணியாற்றி வந்ததைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.[1]

குலோத்துங்கச் சோழதேவன்

கொங்கு நாட்டை ஆட்சி புரிந்த கொங்குச் சோழர்களில் தலைசிறந்தவன். இவ்வரசன் கி. பி. 1149 முதல் கி. பி. 1183 வரை ஆட்சி புரிந்துள்ளான்.[2] இவனுக்கு இராசகேசரிவர்மன்,[3] திரிபுவன சக்கரவர்த்திகள், கோனேரின்மை கொண்டான், திரிபுவன வீரதேவன்[4] போன்ற பட்டப்பெயர்கள் இருந்ததைக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். இவன் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் கொங்கு நாடு முழுவதும் காணப்படுகின்றன. இவ்வரசன் பெயர் கொண்ட ஊர்களும்[5] (குலோத்துங்கச் சோழநல்லூர் கோயில்களும்[6] (குலோத்துங்கச் சோழீசுவரமுடையார்) இருந்ததாகக் கல்வெட்டுகளால் அறிகின்றோம். இவ்வரசனுடைய 3 மற்றும் 15 ஆம் ஆட்சியாண்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள கருவூர்க் கல்வெட்டுகள் கோயிற் பணியாளர்களில் கம்மாளர்க்கு வழங்கப்பட்ட சிறப்புரிமைகள் (தனிச்சலுகைகள்) பற்றிக் குறிப்பிடுகின்றன.

கம்மாளர்

கொல்லர், தச்சர், தட்டார், கன்னார் ஆகிய நால் வகைப் பிரிவினர்களும் கம்மாளர் என்று கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளனர். இவர்கள் கோயில்களில் தேர் செய்தல், அணிகலன்கள் செய்தல் போன்ற பணிகளை மேற்கொண்டிருந்தனர். இவர்களுக்குச் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டதாகக் கொங்கு நாட்டில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன,

கம்மாளர்க்குச் சிறப்புரிமைகள்

கருவூர் (கரூர்), பசுபதீசுவர கோயில் மொட்டைக் கோபுரத்தின் வலதுபுற வாயில் சுவரில் உள்ள கல்வெட்டு

கள்[6] கம்மாளர்க்கு வழங்கப்பட்ட சிறப்புரிமைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன.[7]

வெங்கால நாட்டுக் கம்மாளர் திருமணம் போன்ற நற்காரியங்களுக்கும், சாவு போன்ற கெட்ட காரியங்களுக்கும் இரட்டைச் சங்கு ஊதிக் கொள்ளவும், பேரிகை உள்ளிட்டவை கொட்டுவித்துக் கொள்வதற்கும், கால்களில் காலணிகள் (செருப்புகள்) அணிந்து கொள்வதற்கும் உரிமை வழங்கப்பட்டதையும், அவர்கள் வீடுகளுக்குச் சாந்து சுண்ணாம்புக் கலவை) இட்டுப் பூசிக் கொள்வதற்கு, உரிமை வழங்கப்பட்டதையும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

இதே செய்தியைக் கோவை மாவட்டம் பேரூர்[8], மொடக்கூர்[9] ஆகிய இடங்களில் கிடைத்த கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன.

கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ கோரினேன்மை கொண்டான் வெங்கால நாட்டுக் கன்மாளற்கு 15 ஆவது ஆடி மாதம் முதல் தங்க
2. ளுக்கு நன்மை தீமைகளுக்கு இரட்டைச் சங்கும் ஊதி பேரிகை உள்ளிட்டவை கொட்டுவித்துக் கொள்ளவும் தாங்கள் புறப்பட வேண்டும்.
3. இடங்களுக்கு பாதரக்ஷை கோத்துக் கொள்ளவும் தங்கள் வீடுகளுக்குச் சாந்து இட்டுக் கொள்ளவும் சொன்னோம் இப்படிக்கு இவ் ஓலைபி
4. டி பாடாகக் கொண்டு சந்திராதித்தவரை செல்வதாகத் தங்களுக்கு வேண்டின இடங்களில் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க
5. இவை விழுப்பாதராயன் எழுத்து.

## முடிவுரை

கோயில்களில் பல்வேறு வகையான பணியாளர்கள் பணியாற்றி வந்துள்ளனர். அவர்களுள் கம்மாளர்க்கு மட்டும் சிறப்புரிமை (தனிச் சலுகை) வழங்கப்பட்டிருப்பதை அறியும்பொழுது அவர்களுக்குக் கோயிற் பணிகளில் இருந்த முக்கியத்துவத்தை நம்மால் உணர முடிகின்றது. சமுதாயத்தில் அவர்களுக்கு இருந்த மரியாதையை இக் கல்வெட்டுகளால் உணர முடிகின்றது.

### குறிப்புகள்

1. 81 of 1909
2. புலவர் குழந்தை, 'கொங்கு நாடு', ப-ம் 529.
3. 171 of 1909
4. 186 of 1909
5. 181 of 1920
6. 124 of 1920.
7. 136 of 1905
8. 562 of 1893
9. 151 of 1905

# வளர்குடி எழுகுடி

## முன்னுரை

கொங்கு நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறப்புச் செய்தியைக் கொண்டு விளங்கின்றது. சேமிப்பு, வரிநீக்கம், சிறப்புரிமைகள் போன்ற செய்திகளைக் கூறுகின்ற கல்வெட்டுகள் காணப் படுகின்றன. நாட்டின் குடிமக்களுக்குக் கொங்குச் சோழர் களும் பாண்டியர்களும் பல்வேறு வகையான நடவடிக்கை களை எடுத்துள்ளதைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

## வீரபாண்டியன்

இவன் முதல் கொங்குப் பாண்டியன் ஆவான். வீர பாண்டியன் கி. பி. 1265 முதல் கி. பி. 1285 வரை ஆட்சி புரிந்தவன். இவன் ஆட்சி கோவை மாவட்டம் முழுவதும் பரவியிருந்தது என்பதைக் கல்வெட்டுகள் கொண்டு அறிய முடிகின்றது. கொங்கு நாட்டில் இவனுடைய கல்வெட்டு கள் 63 பதியப் பெற்றுள்ளன. இவன் திரிபுவன சக்கர வர்த்திகள், கோனேரின்மை கொண்டான், கோராசகேசரி, கோமாறவர்மன் போன்ற பட்டப் பெயர்கள் பெற்றிருந் ததைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது. இவனே இராசகேசரி என்று சோழர் பட்டத்தையும் மாறவர்மன்

என்ற டாண்டியர் பட்டத்தையும் சூட்டிக் கொண்டது குறிப்பிடத்தக்கது.

கோவை மாவட்டம் அவிநாசியில் இவ்வரசன் பெயரால் ஒரு தெரு இருந்தது. வாகைப்புத்தூர் என்னும் ஊரில் வீரபாண்டிப்பேரேரி என்ற ஏரி ஒன்றை இவன் வெட்டுவித்துள்ளான். கோவையின் வடக்கிலுள்ள பெரிய நாயக்கன் பாளையத்தை அடுத்த வீரபாண்டி என்னும் ஊர் இவன் பெயரால் ஏற்படுத்தப்பட்ட ஊராகும்.[1]

அவிநாசியிலுள்ள அவிநாசீசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டுகள் இவ்வரசனுடைய ஆட்சிக் காலத்தில் பொறிக்கப்பட்டவை. இக்கல்வெட்டுகளில் ஒன்று வெள்ளாளர் குடியில் இரு குடிகளுக்கும், பூலுவர் (குலாலர்) குடியில் இரு குடிகளுக்கும் கோயிலில் உள்ள கடமைப் பொறுப்புகளை நீக்கி, "வளர்குடி எழுகுடி" என்று அழைக்கும்படி அரசன் ஆணையிட்டதைக் குறிப்பிடுகின்றது.

## கல்வெட்டுச் செய்தி

அவிநாசீசுவரர் கோயிலில் உள்ள அம்மன் கோயில் பள்ளியறைக்கும் தெற்கில் உள்ள கிழக்குச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள இராசகேசரிவர்மன் என்று அழைக்கப்படுகின்ற திரிபுவன சக்கரவர்த்திகள் வீர பாண்டிய தேவனுடைய 8ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு வடபரிசார நாட்டில் உள்ள வெள்ளாள நாடு, பூலுவநாடு ஆகிய இரண்டு நாடுகளிலும் உள்ள நீடு தங்கி வாழும் குடியிருப்பாளர்கள் ஒன்றுகூடி, மேற்குறிப்பிட்ட இரண்டு நாடுகளில் சேவூர் என்கின்ற செம்பியன் கிழானடி நல்லூரில் வாழ்கின்ற வெள்ளாளர்களில் இரு குடிகளுக்கும் பூலுவரில் இருகுடிகளுக்கும் கோயில் கடமைப் பொறுப்புகளிலிருந்து விடுவித்து அந்த ஆண்டு மாசி

பாதத்திலிருந்து 'வளர்குடி எழுகுடி' என்று அழைக்கப் படவேண்டும் என்று ஆணை இட்டதைக் குறிக்கின்றது.[2]

கல்வெட்டு

கொவிறாச கெசரி பர்மரான திருபுவந சக்கிற வற்த்திகள் ஸ்ரீவீறபாண்டிய தெவருக்கு ஆண்டு அ-வது மாகி மீ வடபறிசாரி நாட்டு வெள்ள னாட்டாரும் பின்னாட்டின் செவுரான செம்பியன் கிழானடி நல்லூர் வெள்ளன் னறும் பூலுவரும் பிடிபாடு குடுத்த பரிசாவது யின்னாட்டில் அவனாசி ஆளுடையான் தெவதான மாயவர்கள் காணியானச் செம்பியன் கிழானடி நல்லூர் செவூறான செம்பியன் கிழானடி நல்லூர் கிழ... யெண்ணப் பட்டரும் யிருகுற குடிகளில் வெளான்...ரில் யிரெண்டு குடியும் பூலுவ குடியில் யிரெண்டும் ஆக னாலும் குடியுண் டாவதில் யெதிரா மாண்டு முதல் குடுப்பொமாகும் னீக்கி குடுத்த குடி னாலுக்கும் வளர்குடி யெழுகுடி யென்று சொல்லக் கட ஓமல்லவாகவும் யிப்படிக்கு மக்கள் சந்திராதித்த வரை செல்வதாகவும் யிப்படிக்கு செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கொள்வாரிகளாகவும் யிப்படிக்கி சம்மதித்து பிடிபாடு குடுத்தொம் வடபரிசாரநாட்டு வெள்ள னாட்டொரும் பூலுவ னாட்டொரும் யின்னாட்டுச் செவூரான செம்பியன் கிழானடி நல்லூர் வெளாளருக்கும் பூலுவரு னராருக்கும் யிப்படிக்கி ஒத்தறைறில ஆசி முதலியான சொன் னாறாயணக் கவுண்டன் யெழுத் திப்படிக்கி ஒத்தரைறிய முதலை செறகன கெமாட்டாமென பினைறும் மாட்டெறிந்தென செவன் பூண்டியில் பூலுவன் னாடன் அப்பன் யெழுத்து யிப்படிக்கி னம்பி பெரைறில வெளாளன் முன முக்கன் ஆண்டான் யிப்படிக்கி விண்ணபள்ளியான அபிமானச் சோழனல்லூரில் வெளாளன் மருதக்கவுண்டன் யெழுத்து யிப்படிக்கி யெலத்தூரில் வெளாளன் கொங்கன் கொப் பிள்ளான் யெழுத்து யிப்படிக்கி மருதளான வெளாளன்

யெழுத்து யிப்படிக்கி கையெழுத்துக்கள் விஸ்தாறமாக எழுதியுள்ளன. மங்கலாகயிருக்கிறது.[3]

தேவதானம்

கோயிலுக்கு வரிநீக்கி வழங்கப்பட்ட ஊர்கள் தேவதானம் என்றழைக்கப்பட்டன. இவ்வூர்களில் குடியிருப்போர் கோயிலுக்குப் பணி செய்யவேண்டியது கடமையாகும்.

முடிவுரை

அவிநாசிக் கல்வெட்டு தேவதானமாக வழங்கப்பட்ட ஊர்களில் நீடு தங்கி வாழும் குடியிருப்பாளர்களில் நான்கு குடிகளுக்குக் கோயில் கடமைப் பொறுப்புகளிலிருந்து நீக்கி 'வளர்குடி எழுகுடி' என்றழைத்திருப்பது ஓர் அரிய செய்தியாகும். அரசர்கள் குடிமக்களின் நலனில் காட்டிய அக்கறையை இக்கல்வெட்டு எடுத்துக் காட்டுகின்றது. மக்களுக்கும் அரசர்களுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பினை இக்கல்வெட்டு சுட்டுகின்றது.

## குறிப்புகள்

1. புலவர் குழந்தை, 'கொங்கு நாடு' ப. 536.
2. 184 of 1909
3. S. I. I. Vol. I.



நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே

—ஔவையார்

# நூலின் நுட்பங்கள் குறித்து...

பதினெட்டுத் தலைப்புகளில் பல அரிய செய்திகளைக் கொண்டுள்ள கல்வெட்டுகளைத் தேர்ந்தெடுத்துக் கட்டுரைகளாகக் கொடுத்திருக்கும் முயற்சி போற்றத்தக்கது; பாராட்டற்குரியது.

—டாக்டர் சி. இ. இராமச்சந்திரன்

இந்த நூலில் கூறியுள்ள பல செய்திகள்... அரிய செய்திகளாகவும் புதிய செய்திகளாகவும் இருக்கும். பண்பாட்டியல் நோக்கில் தமிழ் மக்கள் இந்தச்செய்திகளைத் தெரிந்து கொள்ளவேண்டும்... ஆசிரியரின் கூர்த்த பார்வையும் தேர்ந்தெடுப்பு முறையும் இந்த நூலின் சிறப்புக்கு மேலும் மெருகேற்றியுள்ளன. தமிழ்ப் பண்பாடு பற்றி ஆய்வு செய்பவர்கள் இந்தச் செய்திகளை எல்லாம் தகுந்த முறையில் பயன் படுத்திக் கொண்டு பண்பாட்டு ஆய்வியலை விரிவு படுத்தவேண்டும்.

—டாக்டர் பொற்கோ

இந்நூலில் அருஞ்செய்திகள் பல பதினெட்டுத் தலைப்புகளில் சிறுசிறு கட்டுரை மணிகளாக மிளிர்ந்து கருத்துச் சுடரொளி நல்குவனவாயுள்ளன.

—டாக்டர் மின்னூர் சீனிவாசன்